சிவமயம்.

ஸ்ரீமுருகக்கடவுள் துணை.

# ஸ்ரீமுருகக்கடவுள் சோடசப் பதிகப் பிரபந்தம்.



திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருப்பழனி, திருவேரகம்,
பழமுதிர்சோலை, குன்றுதோறாடல், குன்றக்குடி, குமாரமலை,
விராலிமலை, கொடுமளூர், கழுகுமலை, கதிர்காமமலை,
எட்டுக்குடி, திருச்சிக்கல், புள்ளிருக்குவேளூர், திருத்தணிகை
ஆகத் தலம் கசு-க்குப் பதிகம் கசு.

இவை

கல்லல் ஸ்ரீமணிவாசக சரணாலய சுவாமிகளால்
இயற்றப்பெற்று
திரிசிரபுரம் பிஷப் ஹீபர் காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
திரு ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களால்
பரிசோதிக்கப்பெற்று

காரைக்குடி
திரு சுப. சு. ராம. இராமசாமிச் செட்டியாரவர்களின்
பொருளுதவியால் அச்சிற்கேற்றி வெளியிடப்பெற்றன.

Jegam & Co. Dodson Press, Teppakulam, Trichy,—1925.

உ

சிவமயம்

ஸ்ரீ முருகக்கடவுள் துணை

# ஸ்ரீ முருகக் கடவுள்

## சோடசப் பதிகப் பிரபந்தம்

இவை

கல்லல் ஸ்ரீ மணிவாசக சரணாலய சுவாமிகளால்

இயற்றப்பெற்று

திருச்சிராப்பள்ளி பிஷப் ஹீபர் காலேஜ்

தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களாற்

பரிசோதிக்கப்பெற்று

சுவாமிமலை என்கின்ற திருவேரகத்திருப்பதியில்

ஸ்ரீ முருகப்பெருமான் திருமுன்கூடிய

புலவர் பெருமக்கள் பேரவையில்

காரைக்குடி

திருவாளர் சுப. சு. ராம. இராமசாமி செட்டியாரவர்களின்

பெரும் பொருளுதவியால் அரங்கேற்றப்பெற்று



திருச்சிராப்பள்ளி

ஜெகம் அண் கோ., டாட்ஸன் அச்சுக்கூடத்தில்

மேற்படி செட்டியாரவர்களால் அச்சிட்டு

வெளியிடப்பெற்றன

1925

திருச்சிற்றம்பலம்.

# சாத்துக்கவிகள்.

திருச்சிராப்பள்ளி, பிஷப் ஹீபர் காலேஜ்
தலைமைத் தமிழாசிரியர்
திருவாளர் பண்டிதர்,
ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்
இயற்றியது

## சிறப்புப் பாயிரம்.

உலகமு மூயிரு மொன்றிநிறைந் தோங்கி
யிலகுறுஞ் சிவனெம் மிறைநுதல் விழியிற்
பொறிக ளாறுகிப் பொலிதரு குழவியாய்ச்
செறிவுறு கந்தவேள் திசைமுகற் சிறையிட்
டோமெனு மறைப்பொரு ளோதுவென வுமைசேர்
வாமனுக் கருளி மகிழ்குரு சாமி
சூர்முத லாகச் சூழ்ந்தெழு மவுணராங்
கார்நிறக் காட்டைக் களைந்தெறிந் தமரரை
வான்குடி யேற்றிய வள்ளல் மலைதொறுந்
தான்குடி யமருந் தலைவன் றண்டமிழ்ச்
சிறப்பிய லாக வுறத்தெரி பொருளகத்
தன்பம ரைந்திணை யின்பமெ லாமுற
வள்ளியை மணந்த வொள்ளியன் றமிழால்
எள்ளினு மருள்புரி யேந்தலிக் கலியில்
கண்கண்ட தெய்வ மென்று காசினியோர்
எண்கொண்டு பாவி யெவ்வா மும்பெற
வீற்றிருந் தருள்செய் மேதகு திருத்தலம்
சாற்றி னுலப்பில வாமவை தம்முள்

பரங்குன் றலைவாய் பழனிதிரு வேரகம்
பழமுதிர் சோலை பலவுறு குன்றுகள்
எனுநற் படைவீ டிருமூன் றுடனே
பினுமீ ரைந்து பிறங்கெழிற் பதியும்
பரவிய பதிகம் பதிஞ ருகச்
சந்தநலங் கொழிக்கத் தந்து தரணியில்
முந்துறு புகழ்சேர் மூதறி வாளன்
ஆறெனிற் கேண்மின் சீரிய பாண்டித்
திருநா டதனிற் றிகழ்தரு கல்வி
நற்பதி மேவு பொற்புறு குணத்தினன்
தண்டமிழ் மொழியுஞ் சைவமுந் தழைக்கக்
கண்டுளங் குழைக்கும் கருத்தினன் நனவினும்
கனவினு முருகன் கழலிணை மறவான்
**மணிவாசக** சரணலய மாண் பெயர்
அணிவா முருந்தவ னுமவ ளியற்றிய
வளமலி சோடச மாண்பதி கங்களை
உளமிக மகிழ்ந்தேற் றளவில்பல் சிறப்புடன்
திருவே ரகப்பதி முருகவேள் திருமுன்
அவையரங் கேற்றுவித் தச்சிட லானேன்
பண்ணிய புண்ணியப் பயனெலா மொருவழி
நண்ணிய வென்ன நலந்திரண் டோங்கும்
காரைப் பதிவரு கனதன வணிக
நற்குடி யாளன் பொற்புமிக் காரும்
மாத்தூர்க் கோயிலரும் பாக்கூ றுடையார்
வகுப்பினிற் சுப்பிர மணியன் மாதவத்தால்
உதித்தவன் செல்வங் கல்வி யுயர்குணம்
மதித்தகு வண்மை வளர்புக ழன்பெலாம்
மேவரப் பெற்ற சீரிய னேவரும்
இராம சாமி யென் றிசைக்க
விராவிய புகழ்சால் மேதகை யோனே.

சுபம்.

உ

சிவமயம்.

கரந்தைத்தமிழ்ச்சங்கத்து அமைச்சரும், 'தமிழ்ப்பொழில்' பத்திராசிரியரும், தஞ்சை செயின்ட் பீட்டர் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதருமாகிய,

திருவாளர்

## ஆர். வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்

இயற்றியவை.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

பான்மணக்கும் தென்மொழியான் பயிலக்க
வடமொழியான் பயின்று தேர்ந்த
நூன்மணக்கும் நுண்ணறிவான் நொய்ம்மையன
நுவன்றறியான் நோன்பார் சீர்த்தி
வான்மணக்கும் துறவறத்தான் வயங்கியதோ
மில்லறத்தான் மலிந்த அன்பு
தான்மணக்கும் நம்மணிவாசக சரணலய
மேலான் றனையொப் பில்லான் (க)

அன்னான்றன் றமிழ்ப்புலமும் அருஞ்சைவத்
திருநெறியி லமைந்த பாங்கும்
பன்னாவி லேன்பகர்தற் பான்மையனே
பழுந்தவத்தாற் படைத்த வாழ்க்கை
முன்னேதும் அவ்விரண்டன் முதன்மைதர
வுழைத்திடற்கே முற்றி நின்றான்
என்னாவிச் சின்மொழியா லியம்புதலன்
றெடுத்துரைக்க யாவன் யானே (உ

விண்மூடிப் பொழிகின்ற விரிவானின்
மிகவிரைந்து வேண்டு வார்முன்
கண்மூடித் திறக்குமுனங் கவினியபல்
சந்தஞ்சேர் கவிகள் பாடல்

உண்மூடும் இருள்பெருக ஒருகவிக்கும்
மிகவிழிக்கும் ஒருவே னுள்ளத்
தெண்மூடா தெஞ்ஞான்றும் இனிதுநினைந்
திருப்பதொரு எழிலை யம்மா. (௫)
தாய்மொழியாம் தமிழ்மொழிக்குத் தனையர்புரி
தருங்கடன்றந் தகுதிக் கேற்ப
ஆய்மொழியால் அழகுறுநூல் அணியணிந்தும்
அவ்வண்ணம் அணிவார் தம்மை
வாய்வனசெய் தூக்குவித்தும் மாண்பொருள்கள்
இனிதுரைத்தும் மகிழ்த லன்றோ
ஆயவிவை யெலாமுடையன் அம்மணிவாசக
சரணா லயனே யன்னோ (௬)
பார்பரவும் பரங்குன்றம் பழநிமலை
பழச்சோலை பலவாங் குன்றம்
ஏரகஞ்செந் திற்பதியோ டெட்டிகுடி
கொடுமளூர் எழிற் சிக்கல்கு
மாரமலை மாண்கழுகுமலை கதிர்காமம்
தணிகை மயூரக் குன்றம்
வீரமருள் விராலிமலை வேளூர்க்கொவ்
வோர்பதிகம் விளம்பி னானே (௭)
அப்பெரியான் இயற்றுமிவை அனைத்தினையும்
புலவர்கள்சூழ் அரங்க மேற்றி
ஒப்பனைகள் பலபுரிந்தும் உலகமெலாம்
அறிந்துவக்க ஓர்ந்தச் சிட்டும்
இப்புவியில் என்றும்நிலை எழிலறமொன்
றிதனினாங் கில்லை யென்னச்
செப்பரிய பெரும்புகழும் சேரிணையில்
லாவறமுஞ் சேர்ந்தான் அன்னோன் (௮)
பெருங்காரைக் குடியுடையான் எனும்பேரே
தன்கொடையின் பெருமை காட்டச்
சுரும்பார்க்கும் எழிற்சோலை சூழ்மாத்தூர்க்
கோயிலதன் தொடர்பா மேன்மை

அரும்பாக்கூ ருடையனெனல் அரும்பாக்கூ
ருடைமதியை அடுத்துக் காட்ட
வரும்பேறு முழுதுடையான் மாமகிழ்
சுப்பிரமணிய வள்ளல் தோன்றல் (எ)
ஈரமுள திருமனத்தன் இராமசாமிப்
பெயரன் எங்கள் அன்பன்
பேரகஞ்சேர் பெருவாழ்வன் பெரும்பத்தி
மிகுமனத்துப் பெரியன் அன்னோன்
சீரகஞ்சேர் மைந்தர்களும் செல்விகளுஞ்
சிறந்தோங்கச் சேர்பல் பேறும்
ஏரகத்தான் எம்மையன் இன்னருளால்
என்ஞான்றும் எய்தி வாழி (அ)

வாய்ந்த குரோதன வைகாசி யீரேழில்
ஏய்ந்த திருப்பதியாம் ஏரகத்தே—ஆய்ந்தபுல
நாட்டார் தலைமையினில் நன்கரங்கேற்றியமேற்
காட்டுபதி கங்களிவை காண்.

சுபம்.

---

உ
சிவமயம்.
வட ஆறுகாடு ஜில்லா
சேயாறு போர்டு ஐஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
தஞ்சைக் கருந்திட்டைக்குடி
திருவாளர்
**வி. சாமிநாத பிள்ளையவர்கள்**
இயற்றியவை.

## ஆசிரிய விருத்தம்.

அல்லல்தவிர்த் தெமையாளும் ஆறுமுகப் பெம்மானர்
அமருந் தானம்
பல்லவற்றுட் பரங்கிரிமுன் னகவொரு பதினறு
பதிக ளுக்கு

வல்லவர்போற் றுறுசந்தம் நிறைபதிகம் ஒவ்வொன்று
வனைந்தீந் தானல்
கல்லல்நகர் வருமணிவா சகசரணு லயன்றுறவு
கைவந் தோனே (க)
அன்னபதி கங்கைளயெஞ் சாமிமலைச் சந்நிதியில்
அறிவான் மிக்க
கன்னல்நிகர் கவிபாடும் வேங்கடசா மிப்பேர்கொள்
கலைவ லோன்றன்
உன்னுசபா பதியாகு மவையிலரங் கேற்றியுல
குவக்கச் செய்தான்
மன்னுமெழு தாவெழுத்திற் பதிப்பித்தான் யாரென்னில்
வகுப்பா மன்னே (உ)
சிகரத்தாற் றிகழ்காரைக் குடிநகரான் இருசெல்வஞ்
சிறந்த சீமான்
நகரத்தார் குலதிலகன் நன்னடையான் பெருங்கொடையான்
நவிலுஞ் சீர்த்தி
ஒகரத்தார் குகனடியை மறவாத ஒழுக்கத்தான்
ஒருநாத் தன்னுற்
பகரத்தான் முடியாத குணராம சாமியெனும்
பண்பன் மாதோ. (௩)

உ

சிவமயம்.

சேற்றூர் சமஸ்தான வித்வான்

திருவாளர்

## அப்பாவுக் கவிராயரவர்களால்

இயற்றப்பெற்றவை.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

சொல்லாரு நீர்வளமும் நிலவளமும்
குடிவளமும் துகளி லாத
நெல்லாரும் வயல்வளமும் புயலாரும்
பொழில்வளமும் நிறைவுற் றோங்கி

எல்லாரும் மதில்புடைசூழ்ந் தெழின்மணிமா
டங்கள்சிறந் திலங்கச் சான்றோர்
பல்லாரும் இருநிதியக் கிழவரென
வளவரெனும் படிவாழ் மூதூர் (க)

தறைமகளுக் கொருமுகமாச் செங்கமலை
வெண்கமலை தங்கி நீங்கா
துறையுமொரு மாமனையா யோங்குகல்வி
யென்னுநக ருள்ளு வந்து
முறைவழுவா துளுற்றதவப் பேற்றானை
யமர்ந்தருளி மூவா முக்கண்
ணிறைவனடிதொழு மணிவாசக
சரணாலயசாமி யெனுமெய்ஞ்ஞானி (உ)

மாவிருக்குந் தேடுகுகத் தேவிருக்குந்
தலங்கள்பல வற்றின் மேலாக்
காவிருக்குந் திருப்பரங் குன்றாதியவெண்
ணிரண்டுதலங் களுக்கு முள்ளன்
பாவிருத்தப் பதிகமிசைத் துச் சேர்த்துச்
சோடசப் பிர பந்தமாக
நாவிருக்குந் திருவாலவாய்மதுரை
யெனநன்றா நவின்றான் மன்னோ (௩)

விற்பனத்தா ராற்புகழு மிப்பிரபந்தத்
தைச்சாமி வெற்பின் மேனாட்
பொற்பனத்தாற் காண்பரிய பரம்பொருளை
மனமுவந்து பூவான் வில்ல
நற்பனத்தா லருச்சித்துத் துதிக்குமிகு
பத்தியினா னற்கு ணத்தான்
பற்பனத்தார் தடம்பணைசூழ் தருகாரைக்
குடியெனு மெய்ப் பதியில்வாழ்வோன் (௪)

மெத்துபுகழ் மேவியசுப்பிரமணிய
வணிகனங்நாள் விரத நோற்று
மெத்தவுமே மனமகிழ்ந்து பெற்றெடுத்த
வெழிற்குமரன் வேத மேத்தும்
அத்தனமர் தருமாத்தூர்க் கோயில்வகுப்
பேழுதனி லரும்பாக் கூரான்
வித்தகரே வரும்புகழ்ந்து கொண்டாடும்
ராமசுவாமிப் பேர் வள்ளல்

நெடியவரை யிசையானே கோப்புரந்தாற்
கொருமருக னேரா ரான
கொடியவரை யுருவுடைய தானவனே
முதலவுணர் கூட்ட மெல்லாம்
மடியவரை நொடியின்வடி வேலைவிடுத்
தெஞ்ஞான்றும் மலர்த்தாள் போற்றும்
அடியவரைப் புரந்தருளு முருகபிரான்
சந்நிதியின் ஆன்றோர் வாழ்த்த

ஆன்றபெருங் கலைமுழுதுங் கற்றதற்குத்
தக்கவொழுக் கமைந்து மேன்மை
சான்றபெரும் புலமைகொள் வேங்கடசாமி
நாட்டாரின் றலைமையின் கீழ்
ஏன்றபெரும் புலவர்குழா மினிதேற்க
வரங்கேற்ற மினிதாய்ச் செய்தான்
ஊன்றுகற்பு மிக்கமனை மக்களாதிய
செல்வ மோங்க மாதோ.

சுபம்.

உ

சிவமயம்.

ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகளின் மாணுக்கர்

திருவாளர்

# நாராயணசுவாமிகள்

இயற்றியவை.

(ஞ)

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

தேனினங்கண் மதுவருந்திச் செவிக்கினிதா
மொலியிசைப்பத் திகழும் யாழோர்
வானிழிந்து செவியடுத்து வாழுறையு
ளயர்ந்துறையு மலரார் காவின்
கானனஞ்சார் கனத்தனென மலர்ந்துகமழ்
கலைநகராங் கடலைச் சார்ந்து
(சு) தானுலகெ லாம்பொழியுங் கவிமேக
மெனப்புகழத் தகைமை சான்றோன் (க)

வாதவூ ரடிகளடி மறவாத
பெருந்தவத்தான் வையத் தோங்கு
போதகுரு வாமணிவாசக சரணலய
நாமம் புனையப் பெற்றோன்
சீதவயற் பரங்கிரிமுன் னெண்ணிரண்டு
தலங்களினூர் செவ்வே டாட்குக்
காதலுற வெவருமரும் பொருட்பதிகம்
(எ) பதினுறுங் கண்டான் மன்றே (உ)

தன்வணிக குலத்தரெலா மலர்மாலை
சாத்துவித்தார் தா மீசற்கு
அன்னதுபோற் புலராத மாலையணி
விப்பமென வகத்து ளெண்ணி

அன்னவறைற யோகத்தி லமர்முருகன்
திருமுனரங் கேற்று வித்தான்
மன்னிய காரைச்சுப்ர மணியனருள்
சீராம வணிகன் வாழி.

சுபம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ முருகன்றுணை.

திருச்சிராப்பள்ளி, பிஷப் ஹீபர் காலேஜ்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
உயரிய திருவாளர்

**ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்**

மாணுக்கரும்
கரந்தைத் தமிழ்ச்சங்கம் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதரும் ஆகி
திருவாளர்

**உலகதாசர் அவர்கள்**

இயற்றியவை

## குறள்-வெண்பா.

ஆனைமுகன் றம்பின் னவதார மென்றுசொ லும்
ஞானசம்பந் தன்றாள் நாடு.

## நிலைமண்டில வாசிரியப்பா.

தோடுடைச்செவியன் பீடுடைத்தலைவன்
முக்கணனலமர் செக்கர்வார்சடைக்
கண்ணுதன்மைந்தன் புண்ணியச்சேஎய்
குறிஞ்சிக்கிழவன் குமரக்கடவுள்

சந்தவெற்பற்குச் செந்தமிழுணர்த்தியோன்
வாரமில்லுளத்துச் சூரனுரமும்
அடியேன்வினையும் பொடிபடவிரும்பிய
வேலனடியார் வேண்டுவவீவோன்
தாவில்வாழ்க்கைக் கோவில்கண்மீது
உன்னுமுளத்தொடு செவிநாவூனெலாம்
தித்திக்கும்மொழி தேமொழியாமொழி
தென்னன்பிரம்படி செம்பொருள்சுமக்கக்
காரணமாமொழி ஆரியர்பராவும்
முத்திறம்வாய்ந்ததாம் வித்தகத்தமிழின்
சந்தப்பாவா லைந்துடனொன்றும்
பத்துமொன்றிய பவந்தந்தனைப்
பத்துடன்சாற்றிய வுத்தமனாவான்
உலகமேத்தும் அலகில்சீர்த்திப்
புலவர்பாடும் நலமார்தமிழ்நிறை
பாண்டிநன்னாட் மண்டியபுகழார்
புல்லறிவகற்றும் கல்லற்பதியமர்
சிவப்பழம்பொருளைச் சிந்தையுட்சிறையிடும்
தவத்துறைநின்ற தண்ணளியாளன்
செந்தமிழ்சைவம் முந்தியநிலைபெறக்
கனவிலுங்கருதுவோன் தினமணியென்ன
மாக்களறிவினை வீக்கியமலவிருள்
போக்குமொளியார் பாக்கொழிகதிரவன்
மணிவாசக சரணாலயமுனிவன்
இன்னவணியற்றிய நன்னயத்தமிழைச்
சீரகம்அருளும் ஏரகவள்ளல்
திருமுன்னிலையின் உரிமையாக
அரங்கேற்றுவிழாவை யகமகிழ்வுடனே
செய்தோனெழில்சேர் தேசொளியாளன்
காரையளாவுங் கவினொளிர்மாடக்
காரைக்குடியெனும் பேருடைப்பெயரிய
சீரமர்நகரிற் சிறப்புறவந்த

சினமில்குணத்துத் தனவைசியனும்
இராமசாமி யென்னும்பெயரான்
திருவும்நாளும் பொருளும்போகமும்
மனையும்உரிமையும் மக்களும்மகாரும்
இன்னபேறெலா மெய்தப்பெற்று
மன்னியுலகினின் வாழியமாதோ.



நேரிசை வெண்பா.

மணிவா சகசர ணாலய வள்ளல்
அணிவேள் பதிகம்பத் தாறும்—பணிகதலை
ஓதுகவா யுன்னுகவுள் ளோங்கியசீர்ப் போதகமுறக்
காதுகளெப் போதுங் கேட்க.



அறுசீரடி யாசிரிய விருத்தம்.

எண்ணியதோர் சகாத்தமா யிரத்தெண்ணூற்
றின்னூற்பத் தேழின் மேவும்
புண்ணியஞ்சேர் குரோதன வைகாசிபன்னொன்
றெனுந்தேதி புதன் வாரத்தில்
கண்ணியஞ்சேர் சாமிமலை முருகேசன்
சந்நிதியிற் கற்றோ ரொப்பத்
தண்மணிவா சகசரணா லயமுனிவ
னரங்கேற்றித் தந்தான் மன்னோ.

சுபம்.

---

உ

சிவமயம்.

இப்பிரபந்தங்களைத்

தமது பெரும் பொருட்செலவில்

அரங்கேற்றுவிழவு நடத்தி அச்சிடுவித்துதவிய

பெருந்தகையாகிய காரைக்குடி

திருவாளர்

**சுப. சு. ராம. இராமசாமி செட்டியாரவர்களின்**

நன்றியறிதற்பொருட்டு இப்பிரபந்தமியற்றினார்

இயற்றிய பாக்கள்



அறுசீரடி யாசிரிய விருத்தம்.

பூவினிலே தீவினையின் பொலிவதனா
லுறும்பவம்போற் பொருது மோதித்
தாவிவருந் திரைக்கரத்தாற் றரளமெறிந்
தெக்கரிடுந் தன்மை சார்ந்து
மேவியுடை யாயிலங்கும் பேராழி
சூழுலகின் மேனாட் சார்ந்த
தீவினையா லெடுத்தலுத்துத் திரிந்துழலும்
பவமதனைச் செகுப்பான் வேண்டி (க)

சீரேறு மணிமுடியா ராறுமுக
னறுபடை வீடாச் செல்வ
வேரேறுந் தலத்துடன்மற் றெழிலொருந்
தலம்பத்து மெண்ணிச் சேர்ந்த
பேரேறு தலம்பதினா றவையுறையு
மெமதிறைவேற் பெருமான் பாதம்
நாரேறு களிப்புடனே போற்றியென்றன்
சிற்றறிவா னயந்து சாற்றும் (உ)

சந்தமுறு சோடசப்பேர்ப் பதிகமவை
　　தமையுலகிற் றரிப்போ ரெல்லாம்
பந்தமொழிந் திடப்படித்து மேன்மையொடு
　　பன்னலமும் படைத்து வாழச்
சிந்தைசெய்து சுவாமிமலைத் திருமுருகன்
　　சந்நிதியிற் சிறப்பாய்க் கற்று
வந்தபெரும் புலவர்கெழும் பேரவையி
　　லரங்கேற்றி மகிழ்ந் தச்சிட்டான்

அன்னவன் யாரெனிற் காரையம்பதியா
　　னறத்தாற்றி லமர்ந்து வாழ்வோன்
முன்னவனெம் பரமேச னடிமறவா
　　மூதறிவோன் முனிவை விட்டோன்
நன்னலஞ்சேர் சுப்ரமண்ய வணிகனரு
　　ளற்புதச்சேய் நாளு மோங்கும்
பன்னலமும் பொன்னலமும் இன்னலமுந்
　　தன்னலமாய்ப் பரவப் பெற்றோன்

நல்லவுயர் மகப்பேற்று னன்மைதரு
　　திருநீற்றி னலத்தைப் பெற்றான்
பல்லவரும் பரவுமுயர் சற்குணவான்
　　கிளையுறவு பட்ச முள்ளோர்
எல்லவருஞ் சூழவவர் தமைத்தாங்கு
　　மின்புடையா னிணையில் லாதான்
நல்லவனென் றறிஞரெலா மேத்தெடுக்குந்
　　தவமுள்ளான் ஞான மிக்கான்

மயலகற்று மைந்தெழுத்தும் பொலிவாயான்
　　கனிவுடையான் வானி லோங்கும்
புயல்வெளுக்குங் கொடைக்கரத்தான் எனக்கினிய
　　நட்பாளன் புவனத் தென்றும்

சந்தமுறு சோடசப்பேர்ப் பதிகமவை
தமையுலகிற் றரிப்போ ரெல்லாம்
பந்தமொழிந் திடப்படித்து மேன்மையொடு
பன்னலமும் படைத்து வாழச்
சிந்தைசெய்து சுவாமிமலைத் திருமுருகன்
சந்நிதியிற் சிறப்பாய்க் கற்று
வந்தபெரும் புலவர்கெழும் பேரவையி
லரங்கேற்றி மகிழ்ந் தச்சிட்டான் (௩)

அன்னவன் யாரெனிற் காரையம்பதியா
னறத்தாற்றி லமர்ந்து வாழ்வோன்
முன்னவனெம் பரமேச னடிமறவா
மூதறிவோன் முனிவை விட்டோன்
நன்னலஞ்சேர் சுப்ரமண்ய வணிகனரு
ளற்புதச்சேய் நாளு மோங்கும்
பன்னலமும் பொன்னலமும் இன்னலமுந்
தன்னலமாய்ப் பாவப் பெற்றோன் (௪)

நல்லவுயர் மகப்பேற்று னன்மைதரு
திருநீற்றி னலத்தைப் பெற்றான்
பல்லவரும் பாவுமுயர் சற்குணவான்
கிளையுறவு பட்ச முள்ளோர்
எல்லவருஞ் சூழவவர் தமைத்தாங்கு
மின்புடையா னிணையில் லாதான்
நல்லவனென் றறிஞரெலா மேத்தெடுக்குந்
தவமுள்ளான் ஞான மிக்கான் (௫)

மயலகற்று மைந்தெழுத்தும் பொலிவாயான்
கனிவுடையான் வானி லோங்கும்
புயல்வெளுக்குங் கொடைக்கரத்தான் எனக்கினிய
நட்பாளன் புவனத் தென்றும்

அயலவரென் றுறவினரென் றணுவளவு
　　மனத்துள்ளா னருமை மிக்கான்
கயலுகளுங் கண்ணுளாம் பெருமனையின்
　　றுணையுடையான் கற்றோர்க் கன்பன் (சு)

சீரோங்கு மாத்தூரில் நல்லரும்பாக்
　　கூருடையான் சிறந்து நாளும்
பாரோங்கும் பெருந்தனத்தான் பண்புமிகும்
　　பெருந்தனத்தான் படியில் சீலன்
தாரோங்கும் மலர்மார்பன் சற்சனர்
　　நேயஞ்சார்ந்துதருக்கி வாழ்வோன்
ஏரோங்கு மலர்முகத்தான் இராமசாமிப்
　　பெயரோன் என்றும் வாழி. (எ)

சிறப்புப்பாயிரங்கள் முற்றும்.









உ

சிவமயம்.

ஸ்ரீ முருகப்பெருமான்றுணை.

# ஸ்ரீ முருகக் கடவுள்

## சோடசப் பதிகப் பிரபந்தம்.

 

முதலாவது

## திருப்பரங்குன்றப் பதிகம்.



காப்பு வெண்பா.

*சீரார் பரங்கிரிவாழ் செவ்வேண் மலரடிக்குத்*
*தாராரு மோர்பதிகஞ் சாற்றவே—யோருளும்*
*மைவரைவை யோர்கொம்பு மால்வரை நற்றாப்புடைய*
*கைவரையின் செம்பொற் கழல்.*

## ஆசிரிய விருத்தம்.

மன்றலஞ் சினைகளின் மலர்ந்திடும் புதுமலர்வ
டிந்திடும் பிரசமதுவே
வந்துறுஞ் செறுவதனி லொன்றிடும் புலவொழிய
மண்டுறுங் கமலமதின்மே
லொன்றிடும் பெடையன மணைந்திடுந் தனியன
முவந்திடும் படிமருவியே
யும்பரும் புகழுவள ரம்பிரைந் திடுமருத
மொன்றிடுங் கிரியமருவோய்
வென்றிடுங் கொடியபுல னைந்தையும் படியவிடு
விஞ்சைதந் தருள்புரிகுவாய்
விண்செலுங் கொடியுலவி வந்திடுங் கொடியவுணர்
வெந்திடுந் தனியயிலவா
சென்றுசென் றுலகுறுப் வங்கெடும் படியுனது
செஞ்சரண் டனிலருளுவாய்
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே (க

அந்தரஞ் செலுதுடுமி நின்றிடுந் தனியமரு
மைங்கரன் றனதிளையனே
யந்தணன் றனையுயரு மந்தணஞ் சொலுவையென
வன்றருஞ் சிறையிலிடுவோய்
சந்தனந் திமிருமுலை யுந்திடும் புயவழக
சங்கரன் றனதுமதலாய்
தந்தனந் தனனவென நின்றிடுஞ் சிகியமரு
தண்கடம் பணியுமெழிலோய்
வந்தனந் தருமமரர் சங்கடந் தனையொருவ
மங்கலந் தருகுமரனே
வண்டலம் பிடுகுழலி மங்கைசங் கரியருள
வந்தவெஞ் சிறுகுருளையே
சிந்திடும் பலமலர்கு விந்திடுந் திருவடிதெ
ரிந்திடும் படியருள்வையே
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே (உ

அண்டர்முன் சிறுவிதி மகம்புகுந் துயர்வதுற
கந்தைகொண் டிடுவினையினு
லன்றுவந் திடுமவுண னெங்கணுந் தனதுபெய
ரண்டிடுந் தனியரசனுய்
விண்டலந் தனையரசு கொண்டிடுஞ் சுரவிறையை
வென்றுவெந் தரவொருவியே
வெம்பியிந் திரன்மக னினைந்துநைந் துறுசிறையில்
வெந்திடும் படியிடவநாள்
விண்டுவும் பிரமனொடு நொந்துறுந் ததிமதனன்
வெஞ்சரந் தொடவிறையனுர்
விஞ்சிடுந் தனியிமய மங்கையம் பிகைதழுவ
விண்டுவந் தருள்குமரனே
செண்டெனுந் தனமுடைய குஞ்சரந் தருமனைவி
செங்கரந் தழுவுமதலாய்
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே (௩)

கங்கையிந் தரவறுகு கொன்றைதும் பையுமுயர்க
வின்றருஞ் சடையிறைவனுர்
கண்டருங் கனல்வடிவ மங்கலந் திகழ்குமர
கந்தசுந் தரவறுமுகா
பங்கயந் திகழ்பிரமர் தந்தையென் றிடுநெடியர்
பண்டுவந் தடையுமுருகா
பஞ்சரந் திகழுகிளி யென்றிடும் புலவர்சொலு
பண்டருங் கனியுமிசையோய்
மங்கைசங் கரியிறைவர் பங்குறுந் தனிமுதல்வி
மஞ்சினந் திடுகுழலியோர்
வந்துவந் தடிபரவு கண்டுநைந் திடுகிளவி
வண்டனம் பருகுமதலாய்
செங்கைதங் கிடுமயிலை யுந்திவந் திடுமவுணர்
திண்சிரங் குவியவருள்வோய்
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே (௪)

மந்திரஞ் சொலியடியர் சிந்திடும் பலமலர்கண்
மங்கலந் தருமடியின்மேல்
வந்துவந் துயருமெழில் பொங்கிடுந் திருவுடைய
மஞ்சனங் கொளுவரிறையே
தந்திரம் பலவுணரு முந்தையந் தணர்கள்தொழு
சங்கரன் றனதுமதலாய்
தந்திவந் தடவியுற மங்கைவந் துனைமருவு
சம்ப்ரமஞ் செயுமழகனே
கந்தரந் தொறுமுனிவர் தங்கியுன் கழலினிமை
கண்டிடும் படியமருவோய்
கஞ்சனன் றொழியவரு கொண்டலின் கரியவணர்
கன்றுகொண் டவரின்மருகா
சிந்துரம் பலவுலவி வந்துநின் றடிபரவு
திண்பெருந் தவமுனிவர்சூழ்
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே (ரு
அந்திவந் திடமறுகி னின்றுபந் தெனுமுலையி
லண்டிடுங் கலைநெகிழவே
அஞ்சுகந் தணியவுயர் கண்டினைந் திடுமொழிக
ளன்பொடுங் கழறிவருவோர்
சிந்தைகண் டவர்பொருள் கவர்ந்தனைந் தளவுபடு
செஞ்சுகந் தருகணிகைமார்
தெந்தனந் தனின்மருவி நின்றுழன் றிடுமறிவு
சிந்தியின் புறவருளுவாய்
சந்ததம் பரவியுனை யின்புறும் படிகிருபை
தந்துவந் தருள்புரிவையே
சண்டன்வந் தெனைமருவி லுன்பதம் புகல்வனறி
தண்கடம் பணிகுமரனே
சிந்துவெண் டிரைதுதிகள் தந்துநின் றிடுமடியர்
சிந்தைதங் கிடுமயிலினோய்
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே

கொண்டல்கண் படுபொழிலி லங்கிடுங் கிரிமருவு
குஞ்சரந் தனதிளையனே
கொன்றையொன் றிடுசடையர் தந்திடும் பரமகுரு
கொங்கலர்ந் திடுமணிபுயா
பண்டைவந் திடுவினைகண் மண்டிவந் திடர்புரிப
வந்தொலைந் திடவருள்வையே
பங்கயன் பணிபொழுதி னன்றுவந் தருள்புரிவை
பம்பிடுங் கழலையணிவோய்
தொண்டினின் றுனதுபத மண்டிடும் படிகிருபை
துங்கவின் றினிதுதருவாய்
சுந்தரந் திகழுமுடி தங்கிடுங் குமரமணி
தொன்றிலங் கிடுபரிதியே
தெண்டனென் றுலகர்தொழ வண்டுநின் கருணையது
சிந்தையொன் றிடவருள்வையே
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே (எ)

மந்திதண் பலவின்மிசை குந்தியொண் சுளைதனைவ
கிர்ந்துதின் றதிககளியால்
வந்துதெங் கதின்விழவு திர்ந்திடுங் கனிகதலி
வண்பழந் தனில்விழவதால்
நைந்திழிந் திடுபிரச மெங்கணும் பெருகிவரு
நந்தமர்ந் திடுகழனிமேல்
நன்றுசின் றினியபயிர் விண்செலும் படிவளர
நண்டிருந் திடும்வளைகண்மீ
சிந்திடுங் கமுகின்மலர் தங்கியங் குறுசெறுவி
ளைந்திடும் பதிநடுவணே
தென்றல்வந் தினிமையது தந்திடும் படியமரு
திண்பெருங் கிரிவளருவோய்
சிந்தைநொந் துறுபவர்கள் சஞ்சலந் தொலையவருள்
திண்புயந் திகழ்குருபரா
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே (அ)

சந்தனம் புழுகொடு திமிர்ந்திலங் கிடவுயரு
தண்டனக் திகழவழகார்
சங்கலம் பிடிகரம சைந்துயர்ந் திடுகுழல்ச
ரிந்தவிழ்ந் தளிகுமுறவே
சந்தவொண் கவிதனைமொ ழிந்துநின் றினிமையது
தந்தனந் தனிலுயர்வெணுச்
சந்திநின் றெழிலொடு நடந்துவந் துலவிவரு
சம்ப்ரமம் பொலிகணிகைமார்
விந்தைதந் திடுகலவி புந்திகொண் டனுதினமெ
லிந்துநின் றுழலவசமோ
மென்சிலம் பொடுதிகழு முன்பதந் தனிலமரு
விஞ்சைதந் தருள்புரிகுவாய்
சிந்திடும் பலமலர்கு விந்திடுந் தருவதுசி
றந்திடும் பெரியபதியோய்
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே
கந்தியொன் றிடுமடல விழ்ந்திழிந் திடுமதுக
லந்துறைந் திடுவயலிலே
கம்பிருந் திடுகுமுத மம்புயந் திகழவது
கண்டடைந் திடுமனமதே
பந்தியொன் றிடுமுயரு தெங்குயர்ந் தமரர்பதி
பம்பிடுந் தருமுடிதொடாப்
பங்கயன் பரவவுய ருந்தலந் தனில்வளரு
பண்பகர்ந் திடுகுமரனே
விந்தையின் றிருநடன மொன்றிடும் பனிருபுய
வென்றிகொண் டிலகுமதலாய்
மென்பதந் தனின்மருவி யின்புறும் படியருள்வை
விண்புரந் தருள்சமரனே
சிந்திடும் பலமலர்கு விந்திடுந் தருவதுசி
றந்திடும் பெரியபதியோய்
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிமுருகனே

பங்கயம் பொருவுமுக மங்குயர்ந் திடுமுடிகள்
பண்புடன் கெழுமிவாழ்க
பம்பிடும் கருணையது பொங்கிடுந் திருவிழிகள்
பந்தமின் பருளிவாழ்க
செங்கையம் பனிருமலர் தங்கிடும் பலபடைசி
றந்துநன் றிணிதுவாழ்க
திண்புயந் தொடையலணி மங்கலந் திகழ்வதுறு
செங்கையொன் றயிலும்வாழ்க
கங்குல்வென் றிடுபரிதி மங்கிடும் படியொளிசெய்
கந்தமொன் றடியும்வாழ்க
கஞ்சமென் றிடமுகமி லங்கிடுஞ் சுரர்குறவர்
கண்டமங் கையரும்வாழ்க
சிங்கமஞ் சிடவுலவு துங்கவொண் சிகியினொடு
திண்பெறுங் கொடியும்வாழ்க
தென்றருங் கரியளிகள் கொந்துறும் பொழிலிலகு
தென்பரங் கிரிவாழ்கவே. (கக)

(ஆக பதிகம் க, பாட்டு கக.)

---

உ
சிவமயம்.
ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

இரண்டாவது

# திருச்செந்தூர்ப் பதிகம்.

## காப்பு—வெண்பா.

ஏராருஞ் செந்தி லிறைவ ரறுமுகற்கு
நாராரு மோர்பதிகம் நன்கணிபத்—தாராரு
மாணைமுகத் தெந்தை யருள்புரியுஞ் சீரடியின்
றேணையுண்டு நான்பெற்றேன் சீர்.

## ஆசிரிய விருத்தம்.

விண்டலங் குடிமருவு மண்டர்தந் துயரமது
விண்டிடும் படியிறைவனார்
வென்றிடுந் தழல்விழித ரும்பெரும் பொறிகளவை
மென்பரங் குழவிவடிவாய்
தண்டருஞ் சரவணம தண்டியன் றறுவர்முலை
தந்துவந் திடவளர்வுறுச்
சங்கலம் பிணியகர மங்கைசங் கரிதனத
டங்கரங் கொளுமறுமுகா
மண்டலங் குறுகியுயர் தென்பரங் கிரியிரவு
வந்திருந் தணியமறுநாண்
மங்கலந் தருதுணைவர் தங்களின் செறிவினொடு
வந்தடைந் தினிதமருவோய்
திண்டலம் புகழுயர்வு கொண்டிலங் கிடுமரிய
செம்பெரும் பொருள்வளருமேர்ச்
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (க)

மன்றலங் கைதைதரு தண்டருஞ் செழியமடல்
வந்துதிர்ந் திடுபொடிகளார்
வண்டுழும் புன்னைமலரு திர்ந்திடுந் தணியதுறை
மண்டிடும் பவளமிசையே
யன்றில்வந் துயர்கரையி லுந்திடுந் திரைகள்குவி
யம்பொனின் றிரண்மலையெனா
வம்பொலிந் தொளிவிரவு தண்செழுங் கடல்பரவு
மம்பரஞ் செறிதளியுளாய்
பொன்றலந் தனிலமரு மண்டரும் பிரமனொடு
பொன்படுங் கரியவனுமே
புந்திநைந் தனுதினமு வந்துவந் தடிபரவு
புங்கவன் றருமதலையே
தென்றலுங் கரியகுயி லுஞ்சிறந் தெழிலிலகு
திண்பெரும் பொழிறிகழுமேர்
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (உ)

பங்கயஞ் செறிகுமுத மும்பிறங் கிடுகுவளை
பந்திநின் றணிமலரவே
பம்பிடுங் கரியளிகள் கும்புறும் பொழுதொலிசெய்
பண்டருங் கழியதனிலே
யங்குறுங் குருகுணவு கொண்டிடும் புலவுகம
ழுந்தடந் தனிலழகொடே
யண்டிநண் பொடுபெடையை யின்புறும் படிதழுவி
யஞ்சமொன் றிடுமணியதே
பொங்கிவிண் செலுபொழிலி ரங்கிடுங் கனமவை
பொழிந்திடுங் குளிர்மழையதால்
புன்செயும் பயிர்செறியும் நன்செயும் பலமருவு
புங்கமொன் றிலகுபதியோய்
சிங்கமங் கினிதொடுசு மந்திடுந் தவிசிலுறு
திண்புயந் திகழுகுமரா
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (௩)
கொண்டல்வந் தினியபுனன் மொண்டுகொண் டெழுபொழுது
குஞ்சரம் பொருதுவதெனக்
கொன்றநுஞ் சுறவினமி டைந்ததிர்ந் ததிகவிசை
கொண்டெழுந் தணிமுகிலொடே
யண்டிவிண் செலுமுனம டர்ந்துடன் றலமரவ
றிந்துபின் பெரியகடல்வா
யங்குவந் தலைபொரவி ழுந்திடும் பெருவளம
றிந்தெழுந் தருளுமதலாய்
தண்டருந் திரைநுனிகு விந்திடுந் தரளமது
சங்கரன் றிகழ்மலையெனத்
தந்திருந் துயர்வுறவ ளம்படுந் துறைகெழுமு
தண்பெரும் பதியுடையனே
செண்டெனுந் தனமுடைய மங்கைசங் கரிதழுவு
செங்கரந் திகழயிலவா
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (௪)

தென்றருஞ் செழியவிசை தந்திடுங் கரியளிசி
றந்திடுஞ் சினைகள்செறியாச்
சென்றுவிண் டொடுபொழிலி லங்கியெங் கணுமலர்கள்
சிந்திவந் தனைபுரிதல்போ
னின்றுயர்ந் திடவதனி லொன்றிடுஞ் சிகியினநி
மிர்ந்துதஞ் சிகைவிரியவே
நெஞ்சுவந் துபர்குடைக விந்ததென் றிடநிழனி
றைந்திலங் கிடமருவியே
யொன்றிநின் றிலகுபணி கொண்டிலங் கிடவமர
ரும்பர்நின் றலர்சொரியவே
யொண்சிறந் திடுகுடுமி விண்டொடுந் தளியமரு
மும்பரிம் பரினிறையவா
சென்றுசென் றலைகெழுமி வந்துவந் துறுதுறைசி
றந்திடும் பதியமருவோய்
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (ரு)

எண்பெருந் துணைவரொடு வந்திருந் தவுணவிறை
யின்குணந் தெரியவினிதே
யின்புறந் துணைவரின்முன் வந்திடுந் தலைவர்தமை
யின்சொலொன் றுரையெனவிடா
வன்கொடுங் குணவவுண னெண்டெரிந் தவுணநகர்
வந்திருந் தமராருறவே
மங்கலம் பெறுமமரர் தங்களின் றலைவர்துயர்
மங்கிடும் படியருள்செயாப்
புண்படுஞ் சுரர்மகிழ வங்குறுங் கொடியவுணர்
பொன்றவென் றினிதருளியே
பொங்குவெஞ் சினவவுண னெண்பதந் திகழுமயில்
புங்கவன் றுவசமதுவாய்த்
திண்பெறுங் கழல்பாவ நன்றுவந் தருளிவளர்
செங்கையொன் றயிலறுமுகா
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (சா)

முந்திநொந் திடுதுயர கன்றுவந் திடுமெமார்
முன்பெரும் பதிகுடிபுகா
மொய்ம்பிலங் கிடுமுனது தண்பதந் தலைமருவி
முன்புநின் றரியதுதியே
சிந்தையொன் றிடவுரிய மந்திரஞ் சொலிமலர்கள்
சிந்திவந் தனையதுசெயாச்
செங்கையஞ் சலியினொடு நன்றுநின் றவர்தொழுது
தெண்டனென் றடிபணியவே
சந்தமொன் றறுமுகம லர்ந்துவந் தவர்கடுதி
தண்பதந் தனிலினிமையாய்த்
தங்கவங் கினிதருளி யண்டிடுஞ் சுரர்கள்பதி
தந்திடுந் தனிமயிலவா
சிந்துசந் தமவைசொலி நின்பதந் தொழுதுயரு
திண்பெரும் பயனருளுவாய்
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (எ)

ஐந்தெனும் பருவம்வரை தந்தைநொந் துறவருசொ
லன்றிநின் றிடுமடியர்பா
லண்டிவந் திரவுதுயில் கொண்டிடும் பொழுதணுகி
யன்புவந் தினிதருளியே
மைந்தவந் திடுகவென வந்திடுங் குரவரொடு
மன்பெரும் புலவரணுகா
மங்கலந் தருகவிபொ ழிந்துசெந் தமிழணி
மகிழ்ந்தணிந் திடவருளுவோய்
இந்தணிந் திடுபரமர் தந்தகந் தருகசம
ரின்பொடும் பொருதமதலாய்
என்றுமின் புறுமயிலி னின்றுவந் துலகர்மன
மிங்கிதம் பரவவருள்வோய்
சிந்தைதங் கிடுமெனது துன்பமின் றகலவருள்
திண்புயந் திகழறுமுகா
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (அ)

தண்டைகிண் கிணியொடுசி லம்பணிந் தழகுதரு
தண்பதந் திகழவணையே
தங்கிவந் தடிதொழுது நின்றிடுந் தவமுனிவர்
தங்களின் குறையொருவியே
பண்டையொன் றிடுவினைகள் சென்றொழிந் திடவவர்கள்
பங்கிருந் தருளுகுமரா
பஞ்சரந் தனிலினிது தங்கிடுங் கிளிகழறு
பண்புறுந் தமிழ்நுகருவோய்
வண்டலம் பிடுகுழலி யொண்சிலம் புறுகழலி
மங்கைதந் திடுமிளையவா
வந்துநொந் துனதடி பணிந்திடுஞ் சிறியனெதிர்
மங்கலம் பொலியவருவாய்
செண்டுபந் தெனுமுலைசி றந்திடுஞ் சுரர்வனிதை
திண்புயந் தழுவவளர்வோய்
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (௯)

கங்குலும் பகலுமென வந்துவந் திடர்பெரிது
கன்றிடும் பவமருவியே
கண்டிடுஞ் சுழல்வளியி லொன்றிடுந் துகளுயரு
கந்தரம் படுமுறையெனு
விங்குநின் றிருவினையி லண்டிவெம் பிடுமெனையு
மின்படைந் திடவருள்வையே
யெங்கள்சங் கரர்மகிழ வன்றிருந் தொருமொழியை
யின்பொடும் பகருமதலாய்
பொங்கர்தங் கிடுகிளிகள் சந்தமொன் றிடுமறைபு
கன்றிடும் பதியமருவோய்
பொன்றிமங் கிடுமவுணர் தங்குமொண் பதியதுபு
குந்துவந் தவர்முதல்வனே
செங்கையொன் றிடுமயிலி லங்கவந் தருள்புரிவை
திண்புயந் திகழுமழகா
சிந்தினம் பெதிர்பொருத நந்தினம் பலமருவு
செந்திலம் பதிமுருகனே (௧0)

துங்கமொன் றிடுமுடிக டங்குபங் கயவதன
சுந்தரந் திகழுவாழ்க
தொங்குகுண் டலவொளியை யொன்றிடுங் கருணைவிழி
தொன்றிருந் தபடிவாழ்க
செங்கையம் புயமலர்கள் சந்தனந் திகழுமெழி
றிண்புயங் கெழுமிவாழ்க
தென்றருங் கரியளிக டங்கிடுந் தொடையலொடு
செங்கையொன் றயிலும்வாழ்க
வெங்கணுஞ் செலுமயிலு மங்குயர்ந் திடுகொடியு
மின்பொடும் பரவிவாழ்க
விந்திரன் பிரமனரி தங்களின் பதியருளு
மின்பதம் பொலியவாழ்க
கொங்கைகொண் டிடையதுற டங்கிடுங் கொடியனையர்
கொஞ்சியின் பரவிவாழ்க
கொண்டறுஞ் சிடுகுடுமி தங்குசெந் தினகரனை
கும்பிடுந் தளிவாழ்கவே. (கக)

(ஆக பதிகம் உ, பாட்டு உஉ.)

---

உ
சிவமயம்.
ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

மூன்றுவது

# திருப்பழநிப் பதிகம்.

காப்பு—வெண்பா.

மாவார்பழநி மலைவளரு மெங்களிறை
கோவார் முருகன் குரைகழற்கு—நாவாரு
மம்பதிகம் பாட வணிய கரிமுகத்தோன்
தன்பதுமத் தாளே சரண்.

## ஆசிரிய விருத்தம்.

திருவுலவு கமலமனை தருமருத நிலமுயர்வு
செறியவினி தணுகிவளமே
தினமுதவ வதிகவெழி லிலகவதி லுறுமவர்கள்
திணிவறுமை யொருவிநலமே
தருபெருமை யொடுமருவி யடிபணிய வவர்கள்வினை
தணியவரு ளினிதருளியே
சகலவுல கினிலமரு பலபெரியர் சிறியரவர்
தமதுவினை யகலவரமே
தருவையென வனவரத மடையவவர் பிணியகலு
தணியவர மருள்குருபரா
சகலரொடு மிருமலமு மொருமலமு முடையவர்கள்
தமதுநிலை வணமருளுவோய்
மருவுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னிமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே (க)

கருணைபொழி யிருவிழியி னழகுமுயர் கமலநிகர்
கவினுமுக வழகுமலர்வாய்க்
கனியுமணி நகையழகு மருவுகுழை பரவுசெவி
கதிர்பரவு மொளியழகுமே
வருபுவர்கண் மருளகல வுதவுநல பயவரத
மலரைநிகர் கரவழகுமேர்
மணியகடு திகழழகு மொளிவிரவு துடையழகு
மருவுதிரு வடியழகுமால்
தருவடிவ மொருகடிகை தனிலிலகு மறுவடிவு
தருநலுய ருருவழகுமே
தழுவுமுன தெழிலதனை யறையவெவர் தரமுடையர்
தரணிபுக ழமதுகுருவே
மருவுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னிமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே (உ)

இனிமைதரு கனிகளொரு மூவினமதி னிரசமதி
யினிமைதரு குளமவையொடே
யினியதினு மினியமது மிகவிரவி நறுநெய்பய
மிவையளவி யலகில்பலவாய்க்
கனிமதுர வகைபலவு முறவுதவி மிகுபரிய
கலமவையி னிறையமுதமே
களகளென வொழுகமுடி மிசைபெயவு மினிமையொடு
கருதியவை நுகருமணியே
தனியரசு செயுமிறைவ தவமுனிவர் தொழுகுரவ
சகலவினை யகலவருள்வோய்
தனனவென நடனமிடு மயிலதனி னுலகமது
தனைவலம துறுமதலையே
மணியுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே (௯)

வருமறைகள் விரியுமுப நிடதமவை யுணருமுனி
வரர்களடி பணியவொருசார்
மலியுமல வலியதனை வெருவியொரு நிலையமரு
மவுனரடி பணியவொருசார்
திருமருவு தமிழ்மறையின் முறைபனிரு தொகுதியவை
செவியதனி லணிவரொருசார்
திசைபரவு மெழிலருண கிரியருளு புகழினிமை
திகழுவுரை தருவரொருசார்
அருமையுட னுனதுபெயர் பலவவையை யினிதுபுக
லரியதுதி யடியரொருசார்
அமரவிய லுணருமுயர் புலவர்சொலு மதுரவிசை
யதையினிது பருகியமர்வோய்
மருவுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே (௰)

கருதுபுற நெறிமருவு பொருளுதவு கமலையமர்
கரியநிற நெடியனொருசார்
கவினுமக நெறிமருவு கலையுதவு சரசுவதி
கனியுமவர் மகனுமொருசார்
தருநிழலி லரசுபுரி கடகரியி லிவருமொரு
சசிமருவு புயனுமொருசார்
தமதுதொழி லுறுதியுற வடிபணிய வவர்மனது
சலனமற வருள்புரிகுவோய்
விருதுபல கொடிகுடைக ளரியவிய மதுதிகழ
விணவர்மலர் மழைபொழியவே
விரியுலகர் பணியவுய ரிரதமிசை பவனிவரு
விமலசர வணகுமரனே
மருவுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே (ரு)

அரவறுகு மதிநதிய மணிசடைய ரினிமையுட
னருளுமொரு வினியமதலாய்
அணியமர கதவடிவி திரிபுவனை யுமைமுலையி
னமுதுதர நுகருசுதனே
விரவுமத சலமொழுக வடியரகம் நடனமிடு
விறலுடைய கரியினிளையோய்
விணவரிறை சலனமற வவுணர்குல மொழியவெணி
விடுமயிலை யுடையகரனே
பரவுமடி யவர்களணி பனிமலர்கள் குவியமது
பரவிநனை வுறுமடியுளாய்
பவமதனை நலமடைய வெனதுமன மதினினைவு
பலனடைய வருள்புரிகுவாய்
மருவுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே (சு)

அரகார வெனவுனது சந்நிதனில் வருபவர்க
ளகமதுறு பிணிகளவையோ
டணுகுமினல் தருவறுமை யகலவவ ரவரறிவி
னளவிலகு கிருபைபுரிவோய்
பரமரொரு கனியதனை யுதவவென விருமதலை
படியைமுனம் வலம்வருகுவோர்
பரிசிலென வருளவெம திறையுலக மெனமுதல்வர்
பணிவினொடு வலமடையவே
பரவிமயி லுலகைவலம் வருதன்முன மமருகனி
பரவுகரி முகனடையவே
பதமணுகி யிதுமுறைய தலவெனவொ ருரையினொடு
பழநிமலை யமருசிறுவா
மருவுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே. (எ)

சருவவுயி ரினுமணுகி யவரவர்கள் தமதுவினை
தனைநுகர வினிதருளுவோய்
தரணிதனி லுனதடியின் மனதுதனை நிறுவிடுவர்
தமதுபிணி யகலநினைவோய்
கெருவமுறு மலர்மகனை யொருபொருளி னுரைகழறு
கெனவரிய சிறையிடுபவா
கெதியுனது பதமலது மறுவழியி லையறிகுவை
கெருடவிறை தனதுமருகா
சருமமணி பரமர்செவி தனிலரிய வுரைசெய்குரு
சமரகுக வறுமுகவனே
தனையறியு மறிவையினி தருளிவரு பிறவிவினை
தணிவுறவும் வரமருளுவாய்
மருவுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே. (அ)

கனகமலை யெனவுயரு தனமதனை யொளிபரவு
கலைமருவ வணிசெய்தினிதே
கனியுமொழி கழறிவரு கணையயிலி னெடுகொடிய
கடுவிடம தெனும்விழியினால்
நினைவழல வினிதினமை கணிகையர்கண் மயல்சருவி
நிசியினொடு பகலுமுழலா
நிறைகனிவு பவளவிதழ் பருகியவர் முலைமலையி
னிறைதவறி விழுகுமடியேன்
மனமதனி லவருறவு தனையகல வினிதருளி
மடமைதனை யொருவமணமார்
வளமுடைய நினதடியி லனுதினமு மறிவுநிலை
வரமதனை யருள்குருபரா
வனமுலவு மலர்நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே. (௯

கனலினிடை விழுபுழுவ தெனவலைசெய் புவிபெருகு
கருதரிய துயர்முழுகியே
கருவழியை யினமினமு மருவுநிலை யதனிலுறு
கதியினுழ லடியன்வினையே
தினம்வளர விடிலணுகி வருபவம தனையொழிவு
செயலருமை யெனதுகுருவே
திகழுமுன தினியவரு ளுதவியெனை நலமதுறு
செழியபத மலரருளுவாய்
இனமதுறு கரிநிரைக ளுலவியவ ணமருமுய
ரெழிலிலகு மணியபதியாய்
இசையினொடு முயருதமிழ் புனைபவர்கண் மிடிபகல
வினிதருளு பரமன்மதலாய்
வனமுலவுமலர் நிறைவு தருபொழில்கள் தமிலிலகி
வளர்தருவி னினமுதிருமா
மலர்கழனி தினமுதவு மதுவொழுகி நதியதென
வருபழநி மலைமுருகனே. (௧௦

கனியுதிர விலகுபொழி லமருமயர் பழநிமலை
கனமதொடு தினமும்வாழ்க
கவினொளிசெய் தளியின்மிசை யமருமெம திறைமுருகர்
கழலினிமை யுடனும்வாழ்க
இனிமையொடு சிவனடியர் குழுவினமு மவர்கடமை
யினிதுபர வுவரும்வாழ்க
இகல்வெருவி யுலகினர்க ளறிவினொடு மனுதினமு
மிசைபெருகி நணுகிவாழ்க
பனிமதிய மிரவியொடு படருமுகி லினமமரர்
பரவுதிரு மருமன்வாழ்க
பகருமறை புகலுமய னினியகலை மகளிலகு
பதுமமக ளவளும்வாழ்க
தனியனெனு மெமதிறைவ னிறைவியவர் மருவுசிவ
சமயமது தழுவிவாழ்க
தமிழினிமை யொடுபெருகி வளரவதை யமர்பவர்கள்
தரணிமிசை வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் ந, பாட்டு நந.)

உ

சிவமயம்.

ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

நாலாவது

# திருவேரகப்பதிகம்

காப்பு-வெண்பா.

தாரகஞ்சா ருங்குமர சாமிவளர்ந் தோங்குதிரு
வேரகத்துக் கோர்பதிக மேத்தவே—நாரகத்திற்
சீராகத் தங்கிச் சிறப்பளிக்கு மோர்கொம்புக்
காரானை செம்பொற் கழல்

## ஆசிரியவிருத்தம்.

ஏரிலங் கிடுமவுலி தாரணிந் தணிவளவ
ரேமமொன் றிடுகுடையினா
லீகையொன் றிடுமரசு தானருந் துறைநெறியி
லேசெயும் பெரியபடியார்
நீரிரைந் தரியமலர் தாதுசெம் பொனொடுமணி
நேர்வுறுந் திரையலையினால்
நீண்மருங் கிருகரையு மோதியுந் திடுமணிய
நீர்மையம் பொனிநதியதே
யார்வுறும் படிபெருகி யோடிடும் புகழணிய
வாகியங் கெழுமிவடபா
லாகியந் தரமுலவு மாடமெங் கணுமுகில்க
ளார்வுறுந் தனியழகொடே
யேர்வளம் பொலிமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே

மாரனுந் தனதுபடை வீடெனும் படிதிகழு
மாறிலங் கிடுமலர்களால்
வாடைவந் தினிமைதரு சோலையும் படர்கொடிகள்
வாவியுங் கெழுமியினிதே
சேரணம் பெடைகளொடு தாமிருந் தினிமைபெறு
தீநறுங் கமலமதிலார்
தேனுமங் கெழிலமரு காவினந் தருசினைகள்
சேருமம் பிரசமினமே
வாரமென் கனியிரச மோடிணைந் தருகிலுறு
மாபெரும் பணைநிறையவே
வாழ்வுறுங் கபலினின மேவிடும் புலவொழியு
மாவளம் பொலியவணிசேர்
ரேர்வளம் பொலிமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே

வாரணிந் திடுமுலையி னேரிலங் கிடுமகளிர்
வாசமென் கலவையுடனே
மா[illegible]ந் செழியதணி ரோடைசென் றதிலிலகி
வாகொடுங் குடையவெதிரே
நேரனம் பொறிகலப மேவுறுஞ் சிகிசகர
வாகமுஞ் சுகநிரைகளே
நேசமென் றணுகியவ ரோடுறும் படிமருவு
நீர்மைகண் டவர்வெருவியே
தாரணிந் திடுகுழல்க ளாடமென் கலைகளொடு
தானெழுந் தருகுகரையே
தானடைந் திடவருகு சார்வுறும் பறவையவை
தாமுமஞ் சியகனகலா
மேர்வளம் பொலிமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலையின் றலவுதிரு
வேரகந் திகழ்முருகனே (௩)
காரியங் குமுறுமொலி யோர்புறம் பரவுமளர்
காதுமம் பறையின்மொலிமால்
காணுமம் பெனும்விழிய ரோலிடுங் குரவையொலி
கால்வருந் தணியின்னொலிசேர்
வேரியங் கமலமிசை தாவிடுங் கரியளிகள்
வீறிடும் பெரியவொலிசார்
மேதின் குழலின்னொலி வாரிடுந் துடியின்னொலி
மேவிடும் பறவையொலிமேல்
நேரியங் கிடுபணில ராசியின் குமுறுமொலி
நீள்கரும் படுமொலிதனால்
நீலவன் கடலின்னொலி போயொழிந் திடவளரும்
நீர்மைதுன் றிடுவளமதா
லேர்வளம் பொலிமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலையின் றலவுதிரு
வேரகந் திகழ்முருகனே (௪)

தானனந் தனனவென மாநடம் புரிமயில்கள்
தாமெழுந் தணியநிழலே
தாமுறும் படியுயர மேவியங் கமரவது
தானுணர்ந் தினியதளிமேல்
வானரம் பையர்கணட மாடவந் தமரரிறை
மாலயன் றமருமருவா
வாரமங் குறவடியின் மேவியஞ் சலியினொடு
வாழ்வுதந் திடுதுரையெனு
வீனமங் ககலவவர் தாடொழும் பொழுதினுய
ரீரமொன் றிடுகருணையா
லேயுமங் கலமடைய மாவரந் தருகுமர
வேழைதுன் பகலவருள்வா
யேனமங் குறுமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே (ரு
சீலமொன் றிளமையிறை யாயிருந் திடுபொழுது
தேவர்வந் தடிபணியவே
சேயிதென் றகமதனி லேகொளும் பிரமனெதிர்
தேவநின் கருணையதனுன்
மாலகங் கொடுசெலுநி யாரெனும் பொழுதரிய
மாலரும் புதல்வனெனவே
வாபரம் பொருளதெனு மோமெனுஞ் சொலினுரைசெய்
வாயெனுந் தருணமறியா
தானுறுந் துயரமது மேவிநின் றிடமுடுகி
யார்வுறுஞ் செயலினுடனே
யாடிடும் படிநிறுவி மேவயன் றெழிலதனை
யார்வமங் குறவருளினோய்
யேனுமங் குறுமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே (சு)

பாருவந் தளியயனே மேவிடுஞ் சிறையில்விடு
பாலநின் ஞெழிலதனினே
பாரகஞ் சுழலவதை யோருமெம் பரமரணி
பாலவென் குறையதெனவே
நேரயன் றகைமைசொல வேவிடும் படிகழற
நீயயன் றனைவிடவுமே
நேயமன் புடனுனது சேயமென் கழல்பரவி
நீடகஞ் செலவிறையனுர்
வாரமங் குறமடியின் மேவுறும் படியருளி
மாபரம் பொருளுரையெனு
வானயந் திரமதனை மேன்மைதங் கிடுசெவியின்
மாலுறும் படியருளினே
யேர்வளம் பொலிமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுழுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே. (எ)
வானமொன் றிடுவிலினை யாலுமின் புறுபுவியின்
வாழ்வைநம் பியமதியினுன்
மான்மிகுந் திடவிருளி லேயுழன் றிடுமெளியன்
மாணுறும் பதமடைவனே
கானுறுங் குழலிலகு தாயளொன் குறவனிதை
காமுறும் புயவழகனே
காமர்பொங் கிடுமுனது மேன்மைதங் கியவடிவு
காணுறும் படியருள்வையே
தேனுவந் துழுமுயரு நீபமொன் றிடுமருமு
தேவகுஞ் சரிகணவனே
தீனர்சந் ததமினிய பாவினந் தருமினிமை
தேறியின் புறவருளுவோய்
யேனமங் குறுமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுழுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே (அ)

மேருமந் தரமெனுரை யாருபந் தனமுலையின்
மேவுதண் டாளவடமே
வீசிடுங் கிரணமது காலநின் றிடுகிடையின்
மேவிடுந் துகிலினழகார்
சாருமின் புறுமொழியி னுலடைந் தயிலெனிகர்
தாவிடுங் கடுவிழியதே
தானமூந் தழனுமதி யாலணைந் தவரினிதழ்
தானுகர்ந் துழலவசமோ
பேரமண் குழுவையொரு போதில்வென் றுலகமது
பீடுறும் படியருளுவோய்
பேசியுன் புகழதனை யோதியின் புறவருள்வை
பேதைசஞ் சலமகலவே
யேர்வளம் பொலிமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே (௯)

வாரமொன் றிடுசரியை மேலடைந் திடுகிரியை
மானுறுந் தகைவளியையே
மாறிடுந் துறையதனின் மேவுறும் புலனெறியை
மாலகன் றிடவணுகிலே
னேருமந் தகனெதிரு காலமென் றெனவுணரு
நீர்மைகண் டிலனதனினு
னேயமங் குறவுனது பாதமொன் றிடுமறிவு
நீடுறும் படியருள்வையே
தாரணிந் திடுமழக வாரணிந் திடுமுலையள்
தாய்திகம் பரிமதலையே
தானுநம் பரமர்புகழ் வேலவந் தெனதுதுயர்
தானகன் றிடவருள்வையே
யேர்வளம் பொலிமருத வேலிதங் கிடுதருவி
னேயுமென் சினைமலரிலே
யீரமொன் றளிகுமுறு சோலைநின் றுலவுதிரு
வேரகந் திகழ்முருகனே (௧0)

வானுறுஞ் சோலைசெறி யோகஞ் சாமிமலை
மாணுடைந் தாவிவாழ்க
வாலையெந் தேவிசிவை பாரகந் தேடுபரை
மாதரான் றுமும்வாழ்க
தேனுறும் போதணியு மாதிரந் தேவருக
தீரனெஞ் சாமிவாழ்க
தேவியங் கானவிரு மாதருந் தாவுமயில்
சேவலுந் தாழும்வாழ்க
கானுறுஞ் சீதமலர் தானிடும் பேரடியர்
காதலுந் தாழும்வாழ்க
காமுறுந் தூயதமிழ் தான்மிகுந் தேர்பாவு
காமரம் பாரும்வாழ்க
மீனுறுஞ் சேணெறியின் மேவிடும் பானுமதி
மேகமுந் தாழும்வாழ்க
வீரமங் காருமயி லார்வுறுந் தூயகர
மேனியும் வாழ்கமாதோ (கக)

(ஆக பதிகம் ச, பாட்டு சச.)

உ
சிவமயம்.
ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

ஐந்தாவது

# பழமுதிர் சோலைப் பதிகம்

காப்பு வெண்பா.

பழமுதிருஞ் சோலை பரவுமெங்கள் வேலர்க்
கழகொழுகு மோர்பதிக மாற்ற—மழகளிறு
வந்தென் னுளக்கோயின் மன்னித் திருவருளைத்
தந்தென் வினைபோக்குந் தான்.

## ஆசிரிய விருத்தம்.

சந்தமுறு பலவீணைகந் திருவ ரினிதோடு
தந்தினிமை யிசைபாடியே
சந்ததமு முறுமேன்மை தங்கியுறு பொழிலாரு
தண்சினைக ளவைமேவியே
மந்திகுதி கொளவாடு கொம்பருறு கனிவானின்
மங்கையர்க ளினிதாகவே
வந்துகொடு சுவையார வுண்டுலவி விளையாட
மண்டுகுறவர்கண் மாதரே
நொந்தவரி ஞெடுமேவு சண்டையிட வவரோடி
நுண்குலவு வடிவோடுமே
நுங்கண் மலையலவாளி னெங்கண் மலையெனவோதி
நொந்தவரி ஞெடுமாடியே
தொந்தமுற வுறவாடு துங்கவள மிகவேறு
துன்பமக லிசைமீறியே
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே. (க)

துன்றுமழை யதினோடு வந்துதலை யதின்மீது
துஞ்சிமுகி லுறுமாதலால்
துண்டமுறு பிறைமேவி யங்குலவி யினிதோடு
துங்கமுற வுறுமாதலா
லென்றுமொளி குறையாது பொங்குமரு விகள்வான
ரின்பமுற வுறுமாதலா
லின்பமுறு தவராசர் தந்தவழல் சிகையாக
வெங்குமுயர் வுறுமாதலால்
கன்றுதரு முழைமேவி நின்றுமறு முகமோடு
கண்டபணி யுறுமாதலால்
கன்றுசின மலைவேடர் கொன்றபுலி யதளாடை
கண்டவிட முறுமாதலால்
துன்றுமொளி பரமேசர் தங்குழவி யதினோடு
துன்றவரு முறையாகுமால்
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே (உ)

உந்தருவி தனிலோடி வந்தமணி குழூவாகி
யொன்றுபட வொளிவீசவே
வும்பர்நக ருறுதேசு மங்கவவர் மனநாணி
யொண்டியுறும் வளமீறியே
தந்திநிரை விளையாடி வந்தபொழு தினிதோடு
தங்குமுகி றனைநாடியே
தங்கள்பகை யெனவோடி யுந்தமுகில் விணிலைகு
தண்டுளிக ளவைவீசவே
வந்தகரி குகைமேவ நின்றபல கவிவேடர்
மங்கையர்க ளடுமுணையே
மண்டியுண வவரோடி யண்டுமணி கொடுவீசி
வந்துமணை தனி லாருமேர்
தொந்தமுற வதின்மேவு சந்தமுறு தளிநீடு
துங்கமுற வளர்நாதனை
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே (௫)

சந்திரனி னுடறேய மிஞ்சிவிணி லுறுசோலை
தந்தமது தனைவான்மிஞர்
தங்குமன மகிழ்வோடு கொண்டுநுகர் வுறவானர்
தங்களின மலவாகவே
வந்துகுற வரிஞேடு சொந்தமென வுறவாடி
மன்றல்வினை செயவேடர்பான்
மங்கையர்கள் தமராகி யங்கவரி ஞெடுமேவி
மன்பெறுவ ரினிதாகவே
யிந்திரனு மினிதாக வந்துசசி யவளோடு
மிங்குலவி விணிலேறுவா
னின்பமதை நுகர்வோர்க ளெங்குளரு மிவண்மேவி
யின்புறுவர் வளநாடியே
சொந்தமுறு படைவீடு கொண்டினிது திகழாதி
சுந்தரம துடஞருவோய்
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே (௬)

பைங்கதிரி னொளிவீசு மங்கையுமை மலைமாது
பந்தமறு சிவையாதியாள்
பண்டுலக மொடுமேவு மண்டமுழு தையுமீனு
பஞ்சமுக மவைதாமுளாள்
சிங்கமிசை வருதேவி சங்கரித னினிதான
செம்பவள வடிவார்சுதா
திண்கரியை வனமீதி லன்றுவரு கெனவோது
செங்கையயில் வடிவேலவா
தொங்கலுறு மயின்மீதி லங்கமொடு மினிதாடு
சொந்தமுறு குருநாதனே
துன்பமவை யறவோட நின்கிருபை யதுபாலி
தொந்தமினி யுளதானதே
துங்கமுறு படைவீடு கொண்டினிது திகழாதி
சுந்தரம துடனாருவோய்
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே. (ரு)

பண்டுவரு மசுரேச னண்டியொளி திகழ்மாயை
பங்கயந லடிமீதிலே
பம்பியெனை மிகவாக வெம்பவிடர் புரிதேவர்
பங்கிலுறு வலிமாயவே
கண்டுமன மகிழ்வாக வுன்றனருள் பெறவேழை
கன்றியுள னெனவோதவே
கஞ்சமலர் முகமாயை யொன்றுசின மதிஞேடு
கண்டுமுனி யொடுகூடியே
பண்டுசுர ஞெடுநால்வர் தந்தகல வவர்வேள்வி
யங்கமுறு தவமேவியே
பண்டமிக வவராகி வந்தசுரர் தனைமோத
வங்கவரு னடிவீழவே
துண்டபட வசுராதி கொன்றுசுர நகர்வாழ்வு
துங்கமுற வருணுதனே
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே. (சா)

கங்கைமதி யரவோடு கொன்றையறு கெழிலார்க
ரந்தையிவை முடிமேவவே
கந்தொடையு மழுமானி லங்குபுலி யதளாடை
கண்டமதின் விடமேவவே
செங்கைதனி லொருசூல மங்கமுற வொளியாரு
செம்பவள மலைமேனியார்
சிந்தைமகிழ் குருநாத வெங்கள்வினை யொழிநீத
செந்திநகர் திகழ்வேதனே
மங்கையர்க ளிருபேரு மின்பமுற புயமேவ
மன்றல்செயு மதிகாரனே
வந்துனது பதமேவி நின்றவெனை யிடர்வீய
மன்கிருபை தரவேணுமால்
துங்கமுறு படைவீடு கொண்டினிது திகழாதி
சுந்தரம துடனுருவோய்
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே. (எ)

சிந்திேனாடு பலவான சந்தவிசை யதுபாடு
திண்பெறவு மருணைதனே
செங்கையயி லதிேனாடு துங்கமயின் மிசைமேவு
செம்பவள வடிவார்குகா
நந்திேனாடு திகழாழி கொண்டகரி யவனோடு
நந்தமய னரியாதியோர்
நன்பதும வடிமேவி யஞ்சலிசெய் திடவாழ்வு
நன்கருளு முருகேசனே
வந்தபவ மதிலேக லின்பமது பெறவேழை
வந்துனது பதமேவியே
வந்தனைகள் செயுமாறு சிந்தைதனி லறிவேற
வந்தருள்வை குருநாதனே
சொந்தமுறு படைவீடு கொண்டினிது திகழாதி
சுந்தரம துடனுருவோய்
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே (அ)

பந்துமுலையதி லேறு வெண்டரள வடமாடு
பங்கயநன் முகமார்மினார்
பஞ்சடியி னிதமேவி யண்டியவர் தருமோக
பந்தமதிலுழ லேழைநா
னந்தமதி யொழிவாகி வந்துனடி மலர்மேவி
யன்பினொடு புகுநாளெதோ
ஐந்துமுக வொருயானை யன்றுவர வுனுமாதி
யம்பரமதனி லாருவோய்
பந்தமுறு மனையாதி சொந்தமென வுறுவோர்கள்
பங்கயந லடிசேர்வரோ
பண்டைமறை வடிவான வெங்கண்மணி யழகான
பந்தவினை தெறுநாதனே
சொந்தமுறு படைவீடு கொண்டினிது திகழாதி
சுந்தரம துடனாருவோய்
தொன்றுபழ முதிர்சோலை நின்றளிக ணிறைமாலை
துன்றவளர் வடிவேலையே (௯)
நந்துமுன தெழிலாரு மிந்துமுக மதுகாண
நங்கண்முன மயிலேறியே
நம்பர்வரு டியபாத மொன்றுகழ லதனோடு
நன்றினிது வரவேணுமே
சிந்தினொடு மகமேரு விந்திரனும் நனிவாடு
செண்டயிலும் வளைவீசுவோய்
திண்பரவு முடிசூடி யங்கமுறு தமிழ்நாடு
செங்குடையி னிழலாரவே
தந்துநிறை திகழ்கோலை யுந்தியுய ரரசான
சந்தமுறு மணிநீபனே
சங்கரித னினிதான மங்களம துறுசேய
சண்டன்வர வதுபாறுவாய்
சொந்தமுறு படைவீடு கொண்டினிது திகழாதி
சுந்தரம துடனாருவோய்
தொன்றுபழ முதிர்சோலை 'நின்றளிக ணிறைடாலை
துன்றவளர் வடிவேலையே (௧௦)

சிங்கமொடு கரியாதி யொன்றுபழ முதிர்சோலை
சென்றுவள ரிறைவர்வாழ்க
செங்கையுறு மயிலோடு பைஞ்சிகியு மதிலேறு
திண்பரவு கழலும்வாழ்க
பங்கயநன் முகமாறு மங்குலவு விழியாதி
பண்பினொடு தினமும்வாழ்க
பங்கிலுறு மிருமாதர் செங்கைகளு மிணிதோடு
பண்டுலவு கொடியும்வாழ்க
நங்களிறை பரமேசர் நங்கையுமை மலைமாது
நங்கரி முகவனும்வாழ்க
நந்துமெழின மலர்மாது துங்கமுறு கலைமாது
நந்தரியு மயனும்வாழ்க
புங்கமுறு தமிழ்நாடு மங்கிலகு தமிழாதி
பொங்குகலை யவையும்வாழ்க
பொங்குகதிர் மதிவான மங்குமுகி லிவையாதி
புங்கமுற வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் ரு, பாட்டு ருரு.)

உ

சிவமயம்.

ஸ்ரீமுருகக்கடவுள் துணை.

ஆறுவது

# குன்றுதோருடற் பதிகம்.

காப்பு—வெண்பா.

குன்றுதோ ருடிக் குலாவுங் குமரனடிக்
கின்றுபா மாலை யிசைக்கவே—யன்று
வனத்துதவுஞ் சித்தி மதவா ரணத்தின்
கனத்தொளிருஞ் செஞ்சரணே காப்பு.

ஆசிரிய விருத்தம்.

மங்கைமா தேவிசிவை யெங்கடா யாதிபரை
வம்புலா வாலைமுடியாள்
வண்டுலா மேர்பரவு செங்கையாள் வார்முலைம
டந்தையா ளாதிசிறுவா
செங்கையீ ராறுடைய துங்கவே ராறுமுக
திண்செயீ ராறுபுயனே
செந்தில்வா ழுறுதிகழ் குன்றைமா தோகைமலை
சென்றுவாழ் மான்மருகனே
கங்கையோ டாரறுகு கொன்றைசேர் வார்சடையர்
கண்டனுன் மேவுமதலாய்
கங்கமே லாடுகள மொன்றியார் மாலவுணர்
கன்றவே லேவுகரனே
வங்கமா ராழியலை யுந்துமே ராருபதி
வந்துவாழ் சீலமுருகா
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே, (க)

கொங்குலா மாலைமுடி தங்கியா காசமது
கொண்டுவாள் வீசுமெழிலோய்
கொம்பர்சூழ் தூயமல ரெங்குமே ராகநிறை
குன்றுலா மேகமதலாய்
கங்குலார் மான்மிடறி லங்குமோ ராதிமுதல்
கண்டவோர் சேதியருள்வோய்
கஞ்சமீ தாருமய னன்றுமா லாகிமுடி
கன்றவே சாடுமுருகா
திங்களா ரேர்குடுமி தங்குமா சாமிமலை
சென்றுவாழ் வானமுதலே
தெந்தன தானவென நின்றுலா மாமயில்சி
றந்துசீ ராரவளர்வோய்
மங்குரேய் மாடமது தங்குமோர் மாமதுரை
வந்துபூ வாளுமிளையோய்
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே. (உ)

செங்கையோ ராழிதிகழ் சங்கிஞே டாருமிறை
சிந்தைமா லாகுமருகா
திண்பராய் மாலவுணர் பொன்றவே சாடுமொரு
செங்கைவாள் வீரர்முதல்வா
கங்கைமா தாதிசுத பொங்கர்சூழ் சோலைமலை
கண்டுவா ழேமமதலாய்
கந்தியோ டாருகனல் தெங்குசூழ் மாபழநி
கந்தநா லாருபுயனே
பங்கிலார் மாதிருவர் கொங்கைதோய் நீடுபுய
பந்தமே வாதிமறையோய்
பண்புசேர் மாலடியர் தங்கஞேய் தீரவருள்
பண்டையோ ஞனகுமரா
மங்கையாள் சீதமுலை தந்தபா லேறுகரு
மஞ்சமே லாடுமணியே
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே. (௩)

எந்தையே மாலடியர் சிந்தையே கோயில்கொளு
மின்பமார் சோதிமுருகா
வென்றுமே சோதிநிறை யுன்றன்மே லானபத
மின்றுநா ஞேதவருள்வாய்
தந்தைதாய் தாரமக வென்றதோர் மாலறிவு
தங்கியேநா ளுழல்வஞே
சந்தமே யோதியுனை யிந்தநா ளேபரவு
தண்குலா வாசையருள்வாய்
முந்தைநா ளானவினை வந்துநா னேயுழல
முந்திடா தேயமர்வையோ
மொய்ம்புலா மாடல்புரி சந்தமார் தோகைபது
முன்றிலார் கோயிலுடையாய்
வந்துசீர் பாதமது சிந்தையா லேதொழவு
மன்றகாய் சீலமருள்வாய்
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே. (௪)

கந்தநா தாகுமர கஞ்சவே தாபரவு
கந்தநீ பாமணிபுயா
கன்றினோ டேபிடிகள் வந்துதா னேயுலவு
கங்குலார் சோலையதுவே
பந்தமா யேவளைவு தந்துமே லேதிகழு
பைம்பொனார் சோதிமலையாய்
பன்றியோ ராமைபுல வொன்றுமீ னைவுயர்
பைந்துழாய் மாலொருழுகுகா
விந்தைமா மாதுமலர் வந்தமா மாதுதினம்
விஞ்சியார் மாமதுரையாய்
வெம்பிநா னேயுழல வென்செய்தா யீதுததி
மென்கழால் காணவருவாய்
மந்திபோ யோலமிடு கந்தவார் நீடுபொழின்
மஞ்சுதோய் நீடுதளியாய்
மன்றுளார் தேடவளர் குன்றுதோ றுடல்புரி
மன்றலா ராறுமுகனே. (ரு)

அஞ்சினன் மேல்விரவு மொன்றினன் மேவுதுய
ரஞ்சிநா னேயுழலவோ
வஞ்சமே லாருமிறை மஞ்சமே லாருமிறை
யண்டியே சேருமடியோய்
செஞ்சடா பாரமது தூன்றுமேர் மாமுனிவர்
சிந்தைதோய் பாதவழகா
செஞ்செவே யானமொழி கொண்டுநா னேயுனது
செங்கழா லோதவருளாய்
பஞ்சினன் மேவுமடி மங்கையா ளாதியுமை
பங்கனார் தேடுமதலாய்
பைஞ்சிகா வீசுமயில் நின்றுலா யாடிவளர்
பண்புசேர் தோகைமலையாய்
வஞ்சியேர் மாதிருவர் கொஞ்சியே யாருபுய
வண்பரா வாதிவிழியாய்
மன்றுளார் தேடவளர் குன்றுதோ றுடல்புரி
மன்றலா ராறுமுகனே. (சா)

சந்துசூழ் மாமலய மொன்றிவா ழாதிமுனி
தன்சொலார் மோனகுருவே
தண்பரா யோதுதமிழ் தங்குமா சேவடித
தும்புதேனே யருளுவா
யிந்துலா மாடமெழில் பொங்குசீ ரேர்பழநி
யெங்கடே வானபரனே
யெண்டிசா மேவுபுய தண்டைசால் சீரடியி
லங்குவாழ்வே யருள்வையே
கொந்துசா லேர்குரவ ணிந்தமார் பாகுமரி
கொங்கைதோய் பானுகருவோய்
குன்றைவாழ் தேவகுற மங்கைதோ ளேயினிது
கொண்டுமா லேறுமதலாய்
வந்துதா னேயடியி லொன்றிநா னேமருவ
மன்றகாய் நீயருளுவாய்
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே. (எ)

அம்புநேர் வாள்விழியி லம்புசூழ் பேருலக
மஞ்சவே வீசிவலையா
யண்டுவோர் காமமுற வின்சொலான் மானுதவி
யங்கையா னீவியணைமேல்
வம்புசேர் மாமுலைனு முங்கவே தோண்மருவி
வந்தவோர் போகமதுவே
வண்டுபோ லேபருக வுந்தியே யாசைதரு
மங்கைமார் பாலுழல்வனோ
சம்புமா தேவரர விந்துசேர் மாசடையர்
தஞ்சுதா வேதமுதல்வா
சங்குமா லாழிபெறு செங்கைமா லாதிசுரர்
தங்கள்வாழ்வே யருளுவோய்
வம்புலா மாமலர்சொ ரிந்துசீர் பாதமதை
வந்தியாதே யுழல்வனோ
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே. (அ)

சந்தைசேர் வாரெனவ ணைந்துசூழ் பேருறவர்
தங்களா லாசையெனுமோர்
சண்டமா வூதையி லுழன்றுமா லான்மனது
சம்பிரா ணோடியுழலா
வந்துபோ மாபிறவி யுந்தவே வாடிமதி
மங்கியே பேரறிவினால்
வண்டுசூழ் மாமலர்க ளொன்றுசீர் பாதமதில்
வந்துளே னீயருள்வையே
முந்தையோ னுனகுக கந்தவேளே குமர
மொய்ம்புகூ ழாடுசிகியாய்
முன்றிலேர் மாதரள மண்டவே மோதுமலை
முங்குமா நீடுதளியாய்
மந்தமா யேயறிவு மங்கிடா தேதிகழ
வந்துநீ யேயருளுவாய்
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே. (௯)

கொண்டையா லேயினிய தொண்டையா லேகுமுறு
கொங்கையா லேமருவியே
கொஞ்சலா லேசரச மிஞ்சலா லேமயல்கள்
கொண்டுமா லேதருகணோர்
கெண்டையா லேபுணரு சண்டையா லேதழுவு
கின்றதா லேயினிமையார்
கெஞ்சலா லேயிதழி னஞ்சினு லேகிறுகி
றென்றுமே லேவிலைமினு
ரண்டையா லேயறிவு மங்கிநா ளேகழிய
வஞ்சினு னேயுழல்வனோ
வங்கணு லேபரமர் தந்தபா லாவெனையு
மண்டிநீ யேயருள்வையே
வண்டலா லேசுரர்கண் மங்கைமா ரேதழுவ
வந்தநா ளேயமருவோய்
மன்றுளார் தேடவளர் குன்றுதோ ருடல்புரி
மன்றலா ராறுமுகனே. (௧0)

சந்தமார் சோதிமுடி தண்பரா வாறுதலை
தங்கியே நாளும்வாழ்க
தந்தனா தானவென நின்றுபா ணோதளிகள்
தங்குமார் மாலைவாழ்க
விந்தைமா தாருபய மும்பொனீ ராறுகர
மென்றுமார் வேலும்வாழ்க
மென்சிகா வீசுமயில் பொங்கிவா ளுடுகொடி
வென்றியாய் நாளும்வாழ்க
சொந்தமா மாதிருவர் பங்கிலே மேவிமிகு
துங்கமாய் நாளும்வாழ்க
தொன்றுளோ ராமடியர் கண்டுசீ ரோதுகழு
றுன்றியே நீடுவாழ்க
பந்தமா மாதிமறை சந்தமார் நீடுபுகழ்
பண்கொடார் நூலும்வாழ்க
பண்டைநா ளாறுபடை யொன்றுவீ டாதிமலை
பண்பொடே வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் சு, பாட்டு சுசு.)

---

உ
சிவமயம்.
ஸ்ரீமுருகக்கடவுள் துணை.

ஏழாவது

# குன்றக்குடிப் பதிகம்

காப்பு—வேண்பா.

மயிலாடு குன்றை மலைமேவு மெங்க
ளயிலாடு செங்கை யழகர்க்—கியலாடு
பாட்டுரைக்க நெஞ்சிற் பயிலு மொருகோட்டுக்
காட்டுமத யானைக் கழல்.

## ஆசிரிய விருத்தம்.

அந்திநிற மேனியொளிர் சுந்தர சுவாமியரு
ளந்தணளி யாறுமுகவா
அம்பிகை தனுதுமுலை தந்தவமுதேபருகு
மம்பர முலாவுமதலாய்
செந்திரு வுலாவுமரு மந்திகழ் முராரிமகிழ்
திண்புய விலாசமருகா
செம்பவள மேனியொரு கொம்பிறைவ ரேதழுவு
செங்கையயி லேறுமிளையோய்
கந்திருவ ராதிசுர ரந்தரவிஞ் ஞ டிறைவர்
கம்பமில ராகிமகிழ்வே
கண்டுகுடி யேறவவர் சொந்தமுறு வாழ்வுதரு
கந்தகுமரா கருணையாய்
கொந்திலகு சோலைசெறி வந்தமது வோடுநதி
கொண்டுபுடை மேவுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே. (க)

கஞ்சமலர் வேதனரி யிந்திர னு மேவியடி
கண்டுதொழு மாதிமதலாய்
கந்தபுரி மேவிவரு மெங்கணவ வீரவிறை
கண்டதக ரேறுசிறுவா
நஞ்சமது மேவுமிட றெங்களிறை யோர்செவியி
னன்பொருளை யோதுகுமரா
நங்கையபி ராமிமலை மங்கையுமை யேதழுவ
நங்கள்கலி தீரவருவோய்
செஞ்சரண மேவியதி லென்றுமுற வேயருள்வை
செந்தினக ராளுமிறையே
சிந்துமது வோடுநதி வந்துபுடை யேபரவு
தென்சிகிர காதிபகுகா
குஞ்சரியி னோடுகுற மங்கையினி தேமருவு
கொங்கலரு நீபமணிவோய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே. (உ)

பொங்கிவரு காமநதி மூங்கியதி லேமுழுகு
புந்திமகிழ் வேயுறவுறு
பொன்றுமடி யேனையரு டந்தினிமை யோடுவளர்
புங்கவடி யேயருளுவாய்
சங்கரி குமாரியிறை பங்கில்வளர் தேவிதரு
தண்கருணை மேவுமதலாய்
சந்ததமு ளுமமதை யின்பமுட ஞேதுபவர்
தங்களொதி ராடுமிளையோய்
கங்கையர வோடுமதி தும்பையணி யாதியிறை
கண்டருமெ மாறுமுகவா
கன்றிநம ஞர்வருமு னுன்றனடி யேயருள்வை
கந்தவடி வேலகுமரா
கொங்கலரு சோலைதர வந்தமது வாறுபுடை
கொண்டுதிகழ் நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே (௩)

கண்டுபடு மீரமொழி விண்டுவரு மாதர்மயல்
கண்டுருகி நாடிநிதமே
கஞ்சுல்பக லாயறிவு லைந்துழலு மேழைமதி
கண்டருளி யாளுமிறைவா
குண்டுபடு பாலுததி யன்றுவரு மாலமருள்
கொண்டுநுக ராதிபரமர்
கொஞ்சவிளை யாடிவரு துங்கமயின் மேலுலவு
கொந்தலரு மாலையழகா
பண்டுபுரி தீயவினை யண்டியிது வேளைமிகு
பங்கமுற வாதுசெயுமோர்
பந்தமற வேகிருபை தந்துனது பாதநல
பங்கயம தோதவருள்வாய்
கொண்டலுறுயில் சோலைதர வந்தமது வாறுபுடை
கொண்டுதிகழ் நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே. (௪)

சந்தமகி லாரமணி பந்துமுலை மூடுகலை
தங்கிநெகிழ் வோடுவிழவே
தங்கரம தால்விரைவி லஞ்சுபவர் போலறாமவை
தந்துகட மூடுகொடியா
ருந்துவிழி யாலறிவு லைந்தவர்கள் பாதமதி
லொன்றியநா ரகமதுவே
யுண்டிகளி மீறாம்மாரு வண்டென நைந்துயரு
முன்றனடி சேரவருள்வாய்
கந்திதரு பாளையது விண்டொழுகு தேனிறைவு
கஞ்சவள மேவுவயல்சூழ்
கட்பொலிக ளேதழுறு குன்றைநகர் வாழ்வருள்கை
கங்கைகுமரா விளையவா
கொந்திலகு சோலைசெறி வந்தமது வோடுநதி
கொண்டழகு நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே.

தெண்டிரையி லேதரள முந்துநறை யோடைநிகழ்
தென்சிகிந காதிபகுகா
செங்கரம தேறுமயில் கொண்டுசூரர் வாழ்வருளு
திண்குமரனே குருபரா
மண்டுபுனல் மூழ்குகயல் கண்டுவிழி யோவென
மருண்டுமிக நாணியெழிலார்
மங்கையர்கண் மேவவரு மஞ்சமிகவே செறியு
மன்றல்கமழ் வாவிநகராய்
வண்டுபடு நீலவிழி மஞ்சுநிகர் நீடுகுழல்
மஞ்சண்முக மாதர்குழுவே
வந்துவிளை யாடுமெழில் பொங்குமணி வீதியதின்
மன்றல்ரத மூருசிறுவா
கொண்டறுயில் சோலைதர வந்தமது வாறுபுடை
கொண்டுயரு நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே.

தந்ததன தானவென நின்றுவிளை யாடிவரு
தண்டையணி நீலமயிலோய்
தண்கருணை யார்பனிரு துங்கவிழி யாறுமுக
சங்கரகு மாரமதலாய்
பந்துமுலை யாடவிடை நொந்துதுயர் மேவுமெழில்
பஞ்சடியு மாகுமரனே
பைந்திணையி னூடபர ணின்றகுற மாதினெதிர்
பண்டுமர மானகிழவா
நந்துலவு வாவிமலர் செங்கமல மீதளிக
ணந்துநறை மூழ்கியயனூர்
நம்பர்புகழ் மேவுமறை சந்திரெஞடு மோதலென
நன்குமுர லோசைமிகமே
கொந்திலகு சோலைசெறி வந்தமது வோடுநதி
கொண்டழகு நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே. (எ)

சந்தவிசை பாடுமவர் சிந்தைகுடி யேறியரு
டங்கநட மாடுமதலாய்
தண்குரவ மாலையணி திண்புயமு ராரிமகிழ்
சம்ப்ரமவி லாசவழகா
பந்தமுறு பாசவலை சிந்தவரு ளேபுரிவை
பண்டைவடி வானசிறுவா
பங்கயமி னூர்பரவு மங்கையுமை யாளுதவு
பண்பரவு வேதமுதல்வா
முந்தைவினை மாயவினி வந்தவினை தீயமன
முந்தவரு ளேபுரிகுவாய்
மொய்ம்பதிக மாமசுரர் தந்தலைக ளேயுருள
முந்தியயி லேவுகரனே
கொந்திலகு சோலைசெறி வந்தமது வோடுநதி
கொண்டழகு நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே. (அ)

கும்பமுனி தேறவுயர் விஞ்சையரு ளாதிகுரு
குண்டலமு லாவுசெவியோய்
குன்றுகளின் மீதுகுடி கொண்டுலகை யாளுமயில்
கொண்டசிறு பாலமணியே
செம்பதும லோசனமி லங்கவளர் மாதிருவர்
திண்புயம ளாவுமெழிலோய்
திங்களறு காருமுயர் செஞ்சடையி னேரிலகு
செம்பவள மேனியரனார்
தம்பெரிய தோளின்மிசை யுந்திவிளை யாடுமுயர்
தண்டையணி பாதமதலாய்
தந்திடையின் மாதறுவர் தந்தமுலை யேபருகு
தண்சரவணா குருபரா
கொம்பிலகு சோலைசெறி வந்தமது வோடுநதி
கொண்டழகு நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே. (கூ)

வந்துபணி யாழ்முனிவர் சொந்தமக மேவிறைய
மங்கலம தேயருள்பவா
வண்டல்தரு வான்மகளிர் தங்களொடு மாடல்புரி
மைந்துதிக ழாதிமதலாய்
சந்துசொல வேபரவை சொந்தமனை மீதுசெலு
சங்கரர்த னாதுகுருவே
சங்கடம தானபவ மங்கியற வேகிருபை
தந்தருளு மாறுமுகவா
சிந்தைதனி லேயுனது சந்தமறை யேர்பரவு
செஞ்சரண மேவவருள்வாய்
செந்தினக ராதிப பரங்கிரியில் வாழிறைவ
திண்கரியி னேரிளவலே
கொந்திலகு சோலைசெறி வந்தமது வோடுநதி
கொண்டழகு நீடுபதியாய்
கொன்றைமிலை வோர்வருக வென்றசிலை மான்மருக
குன்றைமலை வாழ்முருகனே. (கo)

பைந்தமிழி ஞதிகுரு வெங்கள்கும ரேசர்பத
　　　　பங்கய மெநாளும்வாழ்க
பம்புமொலி யேகெழுமு துங்கமுற வாடுகொடி
　　　　பைஞ்சிகியும் நாளும்வாழ்க
சந்தமுறு நீபமல ரொன்றுபுய மாறிருத
　　　　டங்கர மெநாளும்வாழ்க
தந்தம்வினை யாதிவழி பந்தமருள் சோதிவிழி
　　　　தண்கருணை நாளும்வாழ்க
கந்தமிகு மாலைமுடி யொன்றிவள ராறுமுக
　　　　கந்தரயி ஞளும்வாழ்க
கங்கணம தாகுகுற மங்கைசுர யானையவர்
　　　　கண்டுதின மேவிவாழ்க
கொந்திலகு சோலைசெறி வந்தமது வோடுநதி
　　　　கொண்டநகர் நாளும்வாழ்க
குன்றைமலை வாழ்கவரு ளொன்றுதமிழ் வாழ்கமுறை
　　　　கொண்டுலகம் வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் எ, பாட்டு எஎ.)

உ
சிவமயம்.
ஸ்ரீமுருகக்கடவுள் துணை.
எட்டாவது

# குமரமலைப் பதிகம்.



## காப்பு—வெண்பா.

குமரமலை மேவிக் குலவியினி தாருங்
குமர னடிதனிலே கோக்க—வமருமுயர்
நற்பதிக மோங்க நணுகி யருள்புரியுங்
கற்பக விநாயகன்பொற் கால்.



## ஆசிரிய விருத்தம்.

உலகுபுக ழுனதரிய திருவடியி லினிமையுட
னுவகைகொடு சுரர்பணியவே
யுயருகரி யுடையவிறை கெருடவிறை கமலவிறை
யுரிமையொடு தொழுதினிமையே
யிலகவரு ளெனவவர்கண் மனமினிமை யுறவருளு
மினியகர முறுமயிலவா
வெளியனுன தருளடைய வுயர்கிருபை யுறவருளி
யெனையுனது பதமதனையே
யலகில்புக ழொடுதொழுவு நலவறிவு திகழ்மதியை
யகமதனி லுறவருளுவா
யடியவர்க ளிடரகல வெகுவிரைவி லெதிரினுறு
மரனருளு மினியமணியே
குலவுகட லுடையணியு மினியபுவி யுயர்புதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலைபமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (க)

கதிர்பரவு மணிமுடியி னொளியுமொழில் முகமலரு
கமலமதி னொளியுமினிதே
கருணைதரு விழிபரவு மொளியுமதி வளமுலவு
கரமவையி னொளியுமழகார்
புதியமல ரணிதொடைய விலகுபுய வொளியுமெழில்
பொலிவடிவ வொளியுமறைசார்
புவனமெவை யவையருளு திருவடியி னொளியுமெதிர்
பொலியவருள் புரிவையிறையே
மதியணியு மார்செவியி லினியபொரு ளதுபகரு
மதலையென வருகுருபரா
மலியுமென திருளகல மயிலின்மிசை யிதுபொழுதில்
வருகிருபை கருதியுளனேன்
குதிகொள்கட லுடையணியு மினியபுவி யுயர்புதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (உ)

அலகில்பல துறைவிரியு மருமறையை முறையினொடு
மறையுமுனி வர்களொருசார்
அணிபரவு மானுதவு சிவசமய நெறியருளு
மவையுரைசெய் பவருமொருசார்
இலகுமறை வழிவிரியு முபநிடத மதனைநல
வினிமையுட னறைவரொருசார்
எமதுயரு சமயநெறி நிறுவுகுர வர்களுதவு
மொழியிலகு தமிழ்மறையையே
நலமதுறு மிசையினொடு பகருமுறை பணுமிலக
நயமதுற நவில்வரொருசார்
நமதருண கிரிமுனிவர் தருபாத விசைதிகழு
நனியபுகழ் மொழிவரொருசார்
குலவுமிவை விழிய நளி யினியபுவி யுயர்புதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (ரு)

இலகுமறை முறையொழுகி யெரிதழுவி வளமதுறு
மிருடியர்க ளொலியுமொருசார்
இவரமர ரிவர்முனிவ ரிவர்விரத ரிவரடிய
ரெனுமுரைசெ யிளைஞரொருசார்
கலகலென வொலிபரவு கருவிகொடு மிசைபகரு
கணிதவிசை பகர்வரொருசார்
கதியருளு மரகரவெ ..மொழிகள் கழறிவரு
கனமுனிவ ரொலியுமொருசார்
மலமொழிய மனநிறுவி யுனதடியி லறிவுசெல
வளர்பவர்க ளொலியுமொருசார்
மணியசைய வழகொழுகு சிகைவிரிய நடனமிடு
மயில்குமுறு மொலியுமொருசார்
குலவுமிவை விழியருளி யினியபுவி யுயர்புதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (சு)

வறுமைதனை யகலவென வடியதனின் முறையமிட
வருபவர்க ளொலியுமொருசார்
மருவுபிணி பலவதனை யொழியவர மருள்கவெயென
வழிபடுவ ரொலியுமொருசார்
சிறுமைதரு மதியொழிய நலவறிவு திகழவருள்
செயென வருபவருமொருசார்
திகழுமுயர் பெருமைதரு மகவையினி தருளவருள்
செயென வணுகுவருமொருசார்
மறுமையொடு மிகமிதிலு முனதடியை மருவவர
மருள்கவென வருவரொருசார்
வருபிறவி வழியொழிய வினியவரு ளுதவுகென
மனமலர வருவரொருசார்
குறுகுமவ ரினிமையுற வரமருளி யுயர்புதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தழிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (ரு)

அருவமொடு முருவமரு வுருவமென வடிவிலக
வமருமொரு கைலையுறைவோர்
அணிமதிய மரவறுகு நதியிதழி நகுதலையு
மலர்மழுவு மறியுமழகார்
சருமமொடு கரியுரிவை யொளிசெய்துடி யிவையழகு
தாகிறுவு பரமசிவனார்
தனையுமொரு பொழுதுபொரு ளறிதியென வுரையதுசெய்
தனியுருவ மிலகுமரசே
செருவமுறு மவுணவிறை யமரர்சிறை விடுவதிலை
கிளர்வலிமை யறிவனெனவே
செழுமுதுணை யவர்களொடு மசுரநக ரணுகியவர்
கிளையினொடு மடியவருள்வோய்
குருகுலவு பொழிலிலகு மினியவள முறுபுதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (சு)

மருவுலவு மலரளிகள் குமுறுசினை திகழுபொழில்
வளருமலை யதினடுவணே
மணியொளிசெய் கதிர்பரவு சிகரமுடி யிலகுமுயர்
வளமதுறு தளியிலழகார்
திருவுலவு தவிசதினி லரிபிரமர் தொழவமரு
சிவகுமர னெனுமதலையே
திகழுமுன தடிமலரி லடியனினை வதுமருவு
திறலதனை யருள்புரிகுவாய்
தருவுலவு நிழலிலர சதுபுரியு மமரவிறை
தருமகளை யினிமையுடனே
தகைமைபெறு மணமதுசெய் குமரகுரு பரமுருக
சரவணம துறுகுழவியே
குருகுலவு பொழிலிலகு மினியவள முறுபுதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (எ)

அறமதனை வளர்வுசெய விருபடிநெ லதனையிறை
யருளவது கொடுவுலகமே
யமரமுழு வறநிறுவு மெமதுபரை திரிபுவனை
யகிலமதை யருணிறைவிலு
றுறவருளு முமைகௌரி சிவையருளு மரியசுத
வுலகமுழு தளிசெயிறையே
யுனதுபுக ழதனையடி யவனுரைசெய் தரமுமிலை
யொளிபரவு மலரடியினோய்
செறவருவன் மறலிவரு தினமதனின் மயிலின்மிசை
சிறியனெதிர் வுறவருவையே
திகழடியர் புனைமலர்க ளிலகுபுய வழகநல
திறனருளி யெனையணுகுவாய்
குறகுமவ ரினிமையுற வரமருளி யுயர்புதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (அ

மலயமலை தனிலமரு மொருமுனிவ னினிமைபெற
வரமருளி யருளுகுருவே
வருபுலவ னெறியதனி லுறுகணுற நினைவதனின்
மலருமுன தடிமலரிலே
மலருமுய ரினிமைதரு தமிழ்மொழியி லிலகுதொடை
வளமதுற வணியவுடனே
மயிலின்மிசை யணுகியவ னுறுகவலை தனையொழிய
வரமருளி முனமவனுளோ
ரலமருத லொழியவரு ளுதவியவ னுறுகொடிய
னறவருளி யருளுகுமரா
வயனெறியின் மனமதுறு மவரறிவை யெமதுவழி
யடையவருள் புரிவையிறையே
குலவுபொழி லிலகுமுய ரினியவள முறுபுதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (௯)

பலதுறையு மொழுகிவெகு நிதிகளவை திருவிவரு
பழியதனை மனதினினையாப்
பதகனென மனையுறவு கிளைஞரொடு குழுமியவர்
பரவுநெறி தனிலணுகியே
யிலகுமதி யதனைநல துறைநிறுவு மறிவுசெல
விலெனுமுறை யதுகருதியே
யிழிவுபடு பொழுதினுன தடிமலரி னினைவுவர
வெவையுமற வுதறியினிதா
மலகில்புகழ் மருவுமுனை யடைகுவது தகுதியென
வணுகியுள னறிவையினிநா
னவசமுறி னுனதுபழி யதனையினி தொடுகருதி
யருள்புரிவை குககுருபரா
குலவுபொழி லிலகுமுய ரினியவள முறுபுதுவை
குலவுபதி தனிலமருவோய்
குமரிதிரு முலையமுது தமிழ்மறைய தெனவுதவு
குமரமலை வளர்முருகனே. (௧௦)

பமரமிசை பயிலுபொழி லிலகுமுயர் குமரமலை
படியதனி னிதமும் வாழ்க
பதியதென வதினடுவி லொளிசெய்தளி யமருமிறை
பனிருகர முருகன்வாழ்க
நமரமருள் பெறவுதவு கருணைவிழி மலர்வதன
நனிதிகழ வினிதுவாழ்க
நகைபரவு கரமவையு மிலகுபுய மவையுமெழி
னணுகியனு தினமும்வாழ்க
அமரர்பணி யடிமலரு மமரவிறை தருமகளு
மழகுகுற மகளும்வாழ்க
அகிலமொரு கடிகைவலம் வருமயிலு மயிலுமெழி
லமருகொடி யதுவும்வாழ்க
தமர்களென வருமடியர் குழுவினொடு தமிழரசு
தரணிதனி லினிதுவாழ்க
தகைமைபெறு தமிழுலகு முயர்தமிழு மதியிரவி
தருமுகிலும் வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் அ, பாட்டு அஅ.)

---

உ

சிவமயம்.

ஒன்பதாவது

# விராலிமலைப் பதிகம்.

காப்பு—வெண்பா.

மாவார் விராலி மலைக்குமர வேளடிக்குத்
தேவாரு மோர்பதிகஞ் செப்பவே—நாவாருஞ்
சொற்பொருளு நல்ல தொடையும் புனைந்தளிக்குங்
கற்பகமாம் யானை கழல்.

## ஆசிரிய விருத்தம்.

சிந்தாடை யாயுலவு நந்தாத தாரணியர்
சிந்தாகு லாதியறவே
சிங்கார மானபல கந்தாவு மாமலைகள்
சென்றேறி யாடுமிளையோய்
கந்தாகு மாரசிவ மைந்தா வடாதுமலை
கண்டாள் தனுதுசுதனே
கன்றூத வாழ்வதுற வந்தாண் முனுளின்வினை
கண்டோட வேகுருபரா
பைந்தோகை யோடுமயி னின்றே யுலாவுபொழில்
பங்காரு மாமலையுளாய்
பண்டாய மாமறைக ணின்றே பராவவளர்
பண்பான வேதமுதல்வா
தந்தான தானவென நின்றூடு மாணடியர்
தண்பாத மேவவருள்வோய்
சந்தார் விராலிமலை வந்தார் பராவவருள்
தந்தாரு மாறுமுகனே. (க)

மங்காத சோதிமுடி கொண்டாரு மாலமரர்
வந்தே பராவவினிதே
மன்றூடு மீசர்செவி யன்றேற வோர்மொழியை
வன்பாகவே யருளுவோய்
பொங்காழி மீதுதுயில் கொண்டாரு மான்மருக
பொன்சாரு மாமுடியுளாய்
பொன்றூது தேவர்பத மன்றே புகாவளர்வு
புன்றீது தீரவருள்வோ
யிங்காரு மேயுறவு கொண்டாடி லேனுனரு
ளின்பாதமே கெதியெனு
வென்றேபராவியுள னன்றே குகாவறிவை
யென்பாச மேகவருள்வாய்
தங்காத தீயர்தமை யங்கேக வேகடவு
தண்டேறு சேயகரனே
சந்தார் விராலிமலை வந்தே பராவவருள்
தந்தாரு மாறுமுகனே. (உ)

கொந்தாரு மாலைமுடி யங்காரு மாறுமுக
கும்போடு பாடுமெளியார்
கொம்பாரு மாமலர்க ளின்பாவு தேனருவி
கொண்டாரு மாமலையுளோய்
நந்தாத மாமறைக ளன்போடு பேசுகிளி
நன்பூவை மேவியினிதே
நண்போடு மேவமயி லின்போடு மாடிவரு
நந்தாத சோலைமிசையே
வந்தாரு மாமுகிலு வந்தாரு மாமழையை
மங்காமலே பொழியவே
வண்பாவு மாமருத மங்கான சாலிதர
வன்காலி னேயுமளரே
தந்தான தானவென நின்றாடு மேர்பெருகு
சந்தான மேவுநகர்சார்
சந்தார் விராலிமலை வந்தே பராவவருள்
தந்தாரு மாறுமுகனே. (௩)

கொம்போ டுலாவுகரி தன்பாலி னேயுமரி
கொங்காரு கானமிசையே
கும்பான வாவினமு வந்தே பராவுபுலி
கொண்டாடு மாமலையுளாய்
நம்பாத பாதகர்கள் சென்றோடி யேநரகி
னந்தாது நீடவிடுவோய்
நங்கா யுமாகுமர மங்காம லேயமரர்
நன்றாகவாழ வருள்வோய்
அம்பாடு மாசடைய ரென்பாடு மாதொடைய
ரன்போடு தேடுமதலாய்
அண்டாம லேவினைய கன்றோட வேகிருபை
யஞ்சார வேயருளுவாய்
தம்பா லினுமையொடு வந்தார்கள் வாழவருள்
தண்சாரு பாதமதலாய்
சந்தார் விராலிமலை வந்தே பராவருள்
தந்தாரு மாறுமுகனே. (௪)

கும்பான மால்குருகி னம்பேடை யோடுறவு
கொண்டாடி யேயமர்வுறுக்
குஞ்சோடு தானுலவு விண்டாவி யாடுபொழில்
குன்றுமலே வளரவே
வம்பாடு மாமுலேயர் சென்றே பராவுநிழல்
வந்தாடி யாரவணியார்
வண்சோதி யார்குயிலு மின்பாரு மோர்சிகியும்
வந்தோடியே மறையவே
யம்பாடு வேல்விழியர் கண்டே குலாவுநகை
யங்கார வாடியினிதே
யஞ்சாது மாமலர்கள் கொண்டேத ஞதுமனே
யங்கோடி யாருமணிசேர்
தம்போக மாரவளர் சிங்கார மாடமுறு
தண்சே ருலாவுநகர்சார்
சந்தார் விராலிமலே வந்தே பராவவளர்
தந்தாரு மாறுமுகனே. (௫)

ஒன்றான சோதிவடி வென்றேயு மாலறிஞ
ருங்கோது வார்களதுபோ
லொன்றாயு மேல்வடி விரண்டாயு மேலதினு
மொன்றாயு மானவகையால்
கன்றான மால்களிறு முன்றாதை யீசனெடு
கண்பாவு தேவியிவரார்
கந்தாவி வாறரிய நன்றாகவே யருள்வை
கம்பாவு சோதிவடிவே
பின்றுமலே யுனது சிங்கார நாமமது
பண்போடு பேசியினிதே
பெண்பேயு மேவுமொரு மண்பேயு மேலுமொரு
பொன்பேயு மேகவருளாய்
தன்றாதை மேவுமொரு வின்பான சாமியடி
தந்தே குலாவவருளே
சந்தார் விராலிமலே வந்தே பராவவருள்
தந்தாரு மாருமுகனே. (௬)

தண்டா ருலாவுபுய விண்டார் பராவுமைய
தண்டே னுலாவுகழலோய்
தந்தாரு மாலிடையை வந்தோது மாமுனிவர்
தன்கோளை மேவியகமே
பண்டார மாகிவன மங்கேகி யேயினிமை
பண்போடு பேசியுறவோர்
பங்காக வேவரவு மங்கான நீடுதரு
பண்டான தீதலெனவே
கண்டார்கள் பேசவளர் கொண்டாரு மால்குமர
கங்காளர் நாடுசுதனே
கந்தாவு சோதியுறு பொன்கோயின் மேவிவளர்
கண்காணி நீயுமலவோ
சண்டா வராதகனு கென்றேயி வேழைசொனு
சந்தோடமே யருளுவாய்
சந்தார் விராலிமலை வந்தே பராவவருள்
தந்தாரு மாறுமுகனே. (எ)

பந்தான மேருமுலை வந்தாரு நூலினிடை
பண்பார்பெ ணன்னநடையே
பங்கேரு கானுமுக மம்பாவு சோதிவடி
வம்பாவு மால்கணிகையார்
செந்தே னுலாவுமிதழ் தந்தே குலாவியுறு
சிந்தான மோகமதிலே
சென்றே விழாமலுன தம்போரு கானவடி
திண்கோயின் மேவவருளாய்
மந்தார மாலையணி கந்தா குகாகுமர
மன்பா வுதாரகுணனே
வங்கார மேபரவு தண்கோயின் மேவுபர
மன்காண வாழுமதலாய்
தந்தான தானவென நின்றாடு மாணடியர்
தன்பாத மேவவருள்வாய்
சந்தார் விராலிமலை வந்தே பராவவருள்
தந்தாரு மாறுமுகனே. (அ)

அஞ்சான மாமலரை யப்பாக வேவுவிற
லங்கானு மாரணிதமே
யந்தோ விடாமலலர் தந்தேவி யாவியலே
யஞ்சாமன் மோதமனமே
பஞ்சாகி யேயறிவு நைந்தாவி யேயுழனு
பண்பாகி மாதர்மயல்சார்
பங்காகி நானுழல வென்பால் வராதமெதன
பண்டான சோதிமதலாய்
நஞ்சான வாள்விழியர் தஞ்சார லேயணுகு
நங்காத றேயவினிதே
நந்தாத பேரருள்செ யெந்தாய் குமாரகுரு
நண்பாவர் தேறுமமுதே
சஞ்சார மாயுலவு மென்காத லானபணி
தந்தே பராவவருள்வாய்
சந்தார் விராலிமலே வந்தே பராவவருள்
தந்தாரு மாறுமுகனே. (௯)

பொங்காழி யாரமுத மன்போடு மேவுசுரர்
பொன்றுமலே யுணவுமே
புன்காத லாலசுரர் விண்டான மோகினியர்
புன்காம மீறவவரே
சங்காழி யோடுறவு மிங்கீது தீமெதனுரை
தந்தேக வேபரமனார்
தண்பாவு மாலுரை யறிந்தே மினார்வடிவு
தந்தாரு நீயுமெனவே
யங்காரு மோகினிமு னன்போடு காதலுற
வன்றான வீரியமதே
யன்போடு மால்காம தின்பா லுலாவவதி
லங்கான வீரரிளேயோய்
தங்காத காதலொடு நின்றாடு மாணடியர்
தண்பாத மேவவருள்வோய்
சந்தார் விராலிமலே வந்தே பராவவருள்
தந்தாரு மாறுமுகனே. (௧0)

கொந்தாரு மாமலர்க ளங்கார் விராலிமலை
கொண்டாரு கோவில்வாழ்க
கும்பான சோதிநிறை சிங்கார வாறுமுக
கொந்தாரு தோளும்வாழ்க
நந்தா விராறுகர மும்பாவு சோதிமுடி
நன்றாகி நாளும்வாழ்க
நங்காய் குமாரிமகிழ் பங்கேரு காதிசெறி
நங்காணி பாதம்வாழ்க
பைந்தோகை யாடுமயில் விண்டாவி யாடுகொடி
பங்காரு மாதர்வாழ்க
பண்பாக வேயொளிரு கொன்பாவு வேலினொடு
பைந்தாமம் நாளும்வாழ்க
சிந்தேறி யேறுமுகில் விண்பாவு பானுமதி
திண்டேவர் தாமும்வாழ்க
சிங்கார மானதமி ழங்கோது வார்களொடு
செம்பாரும் வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் கூ, பாட்டு கூக.)

சிவமயம்.

ஸ்ரீமுருகக்கடவுள் துணை.

பத்தாவது

# கொடுமளூர்ப் பதிகம்.



காப்பு—வெண்பா.

கொடுமளூர் வாழுங் குமரவேள் பாதத்
திடுமதோர் மாபதிக மேத்த—விடுமா
மதசலத்தை யூற்று மருப்பானை செம்பொற்
பதமலரே நற்றுணையாம் பார்.



## ஆசிரிய விருத்தம்.

முருகுலா மதுவொழுகு மலர்களே சொரியுநிழன்
முதுபுரா தனமதெனவே
முகிழ்பொனூர் தவிசின்மிசை யினிதொடே யமருமுயர்
முருகனே கருணைவடிவே
யருகுலா விடுவனம துறமினூர் மறிமரைக
ளழகொடார் வுறவருளியே
யயிலுலா விடுகரம துடன்மனோர் பணியவம
ரறுமுகா குமரகுருவே
திருவுலா விடுமரும னயனொடே சுரரிறைவர்
திசைபரா வியதலைவரே
தினகரா தியர்களொடு முடிகண்மோ திடவினிது
திகழ்மின ரடிபரவவே
குருவுலா விடுமுகமு மருளுலா விடுநயன
குணமொடே யமருமிறைவா
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே. (க)

அறுமுகா குமரகுக குருபரா முருகவென
வடியரோ விடநணியுளோ
ரமரனே கொடியவுணர் சமரனே பரமர்தரு
மழகனே யெனவுரைசெய்தே
வறுமையா விடையுமெமை யருள்செயா யிறைவவென
மலர்கொடே தொழவுவினிதே
மனமதே தமதுவய முறுதினூர் முனிவரர்கள்
மகிழ்வொடே பணியவெழில்சேர்
சிறுமையா ரிடையுடைய கணிகையார் தனனதன
திமிதிதா வெனநடனமே
செயவினோர் மலர்மழைகள் பொழியவே மகிழ்வினொடு
திகழ்குகா விளையமதலாய்
குறுகுவார் பிறவிவினை யொழியவே யருளுதவு
குருபரா வெனையருளுவாய்
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே. (உ)

அரகரா பரமவுயர் சிவசிவா நமசிவய
வறுமுகா சரவணபவா
வகிலநாயக பரவு மமரர்நாயக வுரிமை
யடியர்நாயக வெனவுமே
பரவுமா ணடியர்வினை தகளொ வகலவருள்
பரமனார் தருமதலையே
பழையனே கலியில்வரு புதியனே யெமையருளு
பனவனே யொளிர்முருகனே
விரவுமா மலர்கொடினை யினிதொடே தொழுபவர்கள்
விரதியோர் குழுவினுறுவோய்
விமலனே யொளிபரவு நிமலனே யயில்கடவு
விறலனே யெனையருளுவாய்
குரவுலா வியவலிய புயமுளா யெமதழக
குறவர்மான் மருககுகனே
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமனூர் வளர்குமரனே. (௩)

சரவண வறுவர்முலை தருபிளா யிமையமகள்
தழுவவே யொருவடிவமாய்
தலைகளா றிலகுமுக கரமிரா றுடனொளிசெய்
தணிவிலா விருபதமொடே
பரவியே வளருமொரு மதலையே யுமையமுது
பருகியே திகழ்சிறுவனே
பணிகுவார் வினையகல வினிதொடே கிருபைதரு
பரமனார் விழிவருபவா
அரவுலா விடுகொடிய வனமதே தனியதென
வமருவோய் மறைமுதல்வனே
யளியுளா யெனதுவினை தனைநலா யருளிவள
ரவனியே தழையவருள்வாய்
குரவுலா வியவலிய புயமுளா யெமதழக
குறவர்மான் மருககுகனே
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமனூர் வளர்குமரனே. (௪)

வறுமையா லிடையுமுயர் பிணிமையா லிலகுவினை
வலிமையா லிழிமதிமையால்
வளையவே வருமுறவு கிளையினு லினிமைதரு
மகவினு லுறுமனையினுல்
சிறுமையா லெனைநலிசெய் பொருண்மையா லிழியடிமை
செறிவினுன் மிகநலியவே
திகைவுறு வெரியினிடை புழுவெனு வுழலுமொரு
சிறியனு னெனையருளுவாய்
மறுமைபோ யடைவதொரு பொருளெதோ வதையறிய
வலியிலே னுனதுபதமே
மனமதார் வுறவினிது தொழுவதே யெனதுதவ
மறையுளா ரரியமணியே
குறுகுவார் பிறவிவினை யொழியவே யருளுதவு
குருபரா வெனையருளுவாய்
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே. (௫)

இரவிலோ வலதுவரு பகவிலோ வலதினைவயி
னிடையிலோ வொருபொழுதிலோ
விலகுமா மனையலது மனையிலார் வெளியலதெம்
மிதயமா மலையதனிலோ
கரவிலோ வலதுநல வுறவிலோ வெனைநலிசெய்
கலியிலோ மனமகிழ்விலோ
கனவிலோ வலதுவரு நனவிலோ விருநிலைமை
கழிவிலோ வெதுபொழுதினீ
விரவியே மயிலின்மிசை யணுகியே வினையொழிய
விழிதனு லருள்புரிவதே
விமலனே பரையுதவு மமலனே மறையிலகு
விறலனே யொருமொழிசொலாய்
குரவுலா வியவலிய புயமுளா யெமதழக
குறவர்மான் மருகககுகனே
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே. (௬)

முகமினு விலகுகணே விழியினுன் முதிர்பவள
விதழினுன் முகடுசெறிவார்
முலேயெனு வருபெரிய மலேயினு லதிலிலகு
வடமினுன் முறுவனகையால்
ககமினு ரொளிசெய்பல வணியினு லணிவிரவு
கலேயினு னறுமணமதால்
கவினினு லிலகுமன நடையினு லிடுகுதுடி
யிடையொடே கதிர்செய்துடியால்
நகுமினு ரெனுமெழில்செய் கணிகையார் தமதுமய
னணுகியே யுழலவசமோ
நறையுலா விடுதொடைய லணிபுயா வெனதுரிமை
நளிர்முகா தனியிளவலே
குகுவெனு திகுதிகு திகுவெனு முழவொலிசெய்
குழுவினோ ரடிபரவவே
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே. (எ)

அணியினு லுயருபல கலேயினு லுலகைவெலு
மறிவினுல் விழிமருவியா
ரழகினுன் முலேயிலுறு புழுகினு னெடியகர
மதனினுன் முறுவன்மயலார்
கணியினு லறிவுபடு குழியிலே விழுவதொரு
கரியெனு வவசமுறவே
கதியதே யெனநினேவு குடிகொளார் மதியினெடு
கருதியே யுழலவசமோ
மணியினு லொளிசெய்முடி திகழவே கொலுவின்மிசை
வளருவோ யெமதுரையே
மதியினு லுனதுபத மதனேயே தொழவுமருள்
மவுன யோகியர்களிறையே
குணிவிலா துயருமொரு குருபரா வமரர்பதி
குறுகவே வரமருளுவோய்
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே (அ)

வழுதிநா டதனைமணி முடிகொடே யரசுபுரி
மதலையே யுகிரகுமரா
மகிழ்வொடே தமிழுலகு திகழவே யுயர்கிருபை
வளரவே யினிதருளுவாய்
கொழுதியே யளிகுமுறு தொடையலார் புயவழக
குருபரா தனியிறைவனே
கொடியதோர் பிணியகல வுனதுதா ளிணையருள்வை
குறவர்பான் மருவுமழகா
பழுதிலா தினியதமிழ் மொழியினு லினியவிசை
பகரவே யருள்புரிகுவோய்
பரசுமா னணியகரர் தருசுதா வமரர்தொழு
பனிருமா விழியுடையவா
குழுவதா யடியர்பலர் குழுமியே யடிபரவு
குமரிமா தருள்குருபரா
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே. (கூ)

அருமையாய் வருபிறவி யிதனிலே செயவுரிய
வவையெலா மிசைவதினிதே
யகலுமேன் மறுபிறவி யெதுவெனு வறியகில
மதனிஞல் விரைதலழகே
பெருமையா மெனவடிமை மனதிலே நினைவுகொடு
பெரிதெதோ வெனவுணரவே
பிறவியா லடையுகல முலகமே னிலைமையுறல்
பிரியமா யொழுகலெனவே
வருமொரோ ரறிவுகொடு மெவருமே கலையுணர
வருவதே நலமதெனவே
மனமதா லுறுதிசெய்த வழியிலே யுலவியுளன்
வரமதா னிறைவுதருவாய்
குருவெனு வடியர்பலர் குழுமியே யடிபரவு
குமரிமா னருள்பரசுகா
கொடுகலா மதிதவழு மொடைநிழா லதிலமரு
கொடுமளூர் வளர்குமரனே (௧௦)

திருவுலா விடுமினிய வொடைநிழா லமருமொரு
சிவபிரான் மகன்வாழ்கவே
திசையுலா விடுபுகழ்செய் கொடுமஞ்ஞ ரினிமையொடு
திருவுலா விடவாழ்கவே
மருவுலா விடுமினிய தொடையலார் மணிமுடியு
மலருமேர் முகம்வாழ்கவே
வழியுமோர் கருணைபொழி விழிகளோ டிலகுபுய
மலரவே தினம்வாழ்கவே
யுருவுலா விடுபசிய சிகையதே திகழ்மயிலு
முயருமோர் கொடிவாழ்கவே
வொளிபரா வியமனைய ரிருவர்மா புயமதனி
லுலவியே தினம்வாழ்கவே
தருவுலா விடுதரணி யுலகமே லெவையுமளி
தமிழுமே தினம்வாழ்கவே
தகைமைசேர் மதியிரவி யுலகுவாழ் முகிலரசு
தரணிமேல் வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் க0, பாட்டு கக0.)

---

உ
சிவமயம்.
ஸ்ரீ முருகக்கடவுள் துணை.
பதினொன்றாவது

# கழுகுமலைப் பதிகம்.

காப்பு—வெண்பா.

மாவார் கழுகு மலைமுருக வேளடிக்கு
நாவாரு மோர்பதிகம் நானிசைக்கப்—பூவாருஞ்
சென்னிக் கடகரியின் சீரடியைச் சந்ததமு
முன்னிப் பதித்தே னுளம்.

## ஆசிரிய விருத்தம்.

திருவுலவு மருமமுள கரிவாத னவனுதவு
செழுமறையை யருளுமயனோர்
திகழ்தருவி னிழலினுறு சுரவரச னிவர்கண்முடி
தினமிடறு கழலுடையனே
குருவுலவு குடுமியொளி ருயர்தளியி னடுவணமர்
குமரகுரு பரவிறைவனே
குறவர்மகள் தழுவவன மதனிலொரு கிழவடிவு
கொளுமிளைய பழையமதலாய்
தருவுலவு பொழிலினலர் மலரினறை யொழுகிவய
றனினிறைய வதினடுநெலே
தழையுமெழி லிலகவுயர் நகர்நடுவி னுயர்மலை
தனிலரசு செயுமயிலவா
மருவுலவு தொடையலணி புயவெனது மனமதுறு
வரமதனை யருள்புரிகுவாய்
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (க)

எனதுமனை யெனதுபொரு ளெனதுநிதி யெனதுடைமை
யெனுமறிவு தனையொழியவே
யினியவுன தளியவரு ளுதவிவினை யினியகல
வெனைநெறியி லுறவிடுகுவாய்
சனதுபெறு முனதடியர் குழுவிலெனை யுறவருள
றருமெனவு முறையமிடவே
தகைமையெது மிலையெனினு மருள்புரித னினதுமுறை
சரவணம தனில்வளருவோ
யுனதுபுக ழுனதுதுதி யுனதுசெய லுனதுபத
முனுதலினை மனதிலருள்வா
யுரகபட மதனில்வள ரரிமகிழு மாரனிய
வுமையருள வளருசிறுவா
மனமதுறு குறையகல வரமருளி யிதுபொழுதின்
மகிழ்வுபெற வருள்புரிகுவாய்
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (உ)

துணியுடைய மணியரவு கொளுமவனி தனின்மனித
ரருமரபின் வருதலரிதே
யதனினுந லவயவம தடைதலரி ததனினுய
ரறிவடைத லரிதரிதுமே
லெணியகலை பலபயிற லரிததனி னினிமைதரு
மிடர்செய்பொறி வலியழியவே
யிலகுபுல னெறியடைத லரிதெனவு மறிஞர்சொலு
மிசையறிவ ருலகர்மிகவே
நணியதுறை யிவைபுகவு மறிவுதிட மிலைபிறவி
நனியடைய வழியுணர்வதே
நசைகொடுப விழிவதுறு முறைபுரியு மெனையுனது
நளிரடியி லுறவருள்வையோ
மணியொளிசெய் முடிதிகழு மறுமுகவ வெனதுமன
மதனிலெனும் வரமருளுவாய்
மலரொழுகு நறைபெருக நனைகழனி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (௩)

மளர்குழுமி விழவுபுரி வனமுடைய கழனியது
வளைவதுற வதிலினியவாய்
மருவுசெநெல் கனலெனவு முரியகனல் கதலியென
வருகதலி கமுகதெனவே
யுளகமுகு தெனையெனவு முயருதெனை சுரதருவை
யுறவளரு மினியவளமா
ருயருபதி யதில்வளரு குடிகள்பணி கொடுகலியி
னொருவவள ரினியமதலாய்
தளவமுகை செறிகுமுத மிலகுமலர் வதனியர்கள்
தனமுழுத புயவழகனே
தமிழினிசை யறியெமது குமரகுரு பரமுதல்வ
தருணிதரு தொழிலுடையவா
வளர்சிகர மொளியரவு தளிதிகழு கிரியதனின்
மருவுசெய லுடையசிறுவா
மலரொழுகு நறைபெருக நனைகழனி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே (௪)

எழிலிலகு பமரமிசை மிகுதொடைய லழகுசெயு
மினியபுய வழகவிளையோய்
யெமதுரிய சமயநெறி வளரவரு மறைமுதல்வ
விறைவிமுலை யமுதுநுகர்வோய்
பழியதனை யணியதென வணியுமெழின் முலைமகளிர்
பகருமொழி யதினிதமுமே
பரவியவர் சுரதவினை தனிலஞ்ஞுகி நறைபருகு
பமரமென வுழலன்முறையோ
விழிவுதரு பலதுறையு மினியவென நணுகியுறு
மெனையுனது கருணையதனு
விடரகல மனமதனி லுயரறிவை வளரவரு
ளிமயமக ளுரியபுதல்வா
வழியடியர் தொழுதணியு மினியவிசை பரவுபுகழ்
மலரடியி லணியுமதலாய்
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (ரு)

பசியசிகை மிகவிரியு மொருமயிலி லினிமையொடு
பதமிலக விவருசிறுவா
பனிருகர பனிருபுய பனிருவிழி யவையினெழில்
பரவியொளி தரவளருவோய்
நிசிசரர்க ளுடலமற வமர்புரியு மிளையதுரை
நினைவதினி லமருமிறைவா
நினதுபத மதனையனு தினமுமன நினைவதுறு
நெறியதனை யருள்புரிகுவா
யொசியுமிடை யுடையகுற மகளினெழில் பருகவன
முறுகுமர வமரரிறையே
யுலகமிது பொழுதிலுறு நிலைமையது கருணைவிழி
யுறவருளி யருள்புரிவையே
வசையகல நினதுயரு கிருபைபெற வுனுமனதின்
மருவுவர மதையருளுவாய்
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (சு)

தனனதன தனனவென நடனமிடு கணிகையர்க
டமதுவிழி வலையதனிலே
சருவியறி வதுசுழல வுருகிமயல் பெருகியவர்
தமதுகடை கதியதெனவே
நினைவுகொடு தவமதனை யறநழுவ விடுமெனது
நிலைமைதனை யெவனறைகுவே
னினதுகடை விழிவலிமை பெறினலம தடைவனினி
நினையலது பொருளுமுளதோ
வனைதனது கருணையினு முயர்கருணை யுடையசிவ
னருளுமொரு சிறியமதலா
யவனியுளர் நினைவதனை யருளுமிறை யுனையொழிய
வமரரெவ ரினிதுபுகலாய்
மனமதனி லுறுகுறைவை யகலநல வருள்புரிவை
மவுனவுல கினர்களிறையே
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (எ)

விணின்வழிசெ லுடுபதியி னுடல்வடுவ துறவணுகி
வெகுவலியி னொடுதடவிபே
மிருகளியி னொடுசுரர்கள் பலபதியு மினிதுலவி
வெடிகுரலி னொலிபரவவே
யணியினுட லுலவிவரு குகுடகொடி திகழுமுடி
யழகுடைய ரதமதனிலே
யனையிருவர் புயதமணி லணையவெகு மகிழ்வினொடு
மணிபவனி வருகுமரனே
பணிபுரியு மடியவர்கள் வினையகல வினிதருளு
பரமரருள் பனிருபுயனே
பவமொழிய வுரியதவ மதுபுரிய வுயர்கிருபை
பணிலெனது துயரகலுமால்
மணியொளிசெய் முடிதிகழ மயிலின்மிசை யினிதமரு
மறைமுதல்வ தமிழினிறைவா
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (அ)

கதிர்பரவி யுதயமுறு சிறுபரிதி பலவிஞெளி
கனியுமறு முகவழகுமால்
கவினுமெழி லிலகுபல படைதிகழு கடகமணி
கமழ்பனிரு கரவழகுமே
ரதிர்பணிக ளொளிசெய்புய வழகுமல ரணிதொடைய
லணிமரும வழகுமெழிலா
ரளிகருணை பொழிவிழிக ளழகுமென திடரகல
வருளுதிரு வடியழகுமே
யெதிரவுயர் நடனமிடு மயிலின்மிசை யனையிருவ
ரிலகவர மருளவருவா
யிமையவர்கள் துயரகல வமையருளு மயிலைமன
வினிமையொடு கொளுமதலையே
மதியொளிசெய் புனலிழியு மதில்பரவு நகர்நடுவின்
வளருமலை யதிலமருவோய்
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே (௯)

எணியபல கருமமவை யினிமையுற வடையுமவ
ரிலகுதவ மதுபுரிகுவோ
ரிமையவர்கள் பதவிபெறு விழைவினர்க ளுயர்கதியை
யினிமையுற வடையநினைவோர்
நணியுனது திருவடியை விதிமுறையின் மலரினொடு
நவிலுமறு மொழிகழறியே
நனிபரவ வவர்கண்மன விழைவடைய வருள்புரிவை
நளிர்கருணை யுடையகுமரா
வணியுனது திருவடியின் முறையமிடு மடியன்முறை
யதுசெவியி லருளியினிதே
யமரவர மருளிவள ருலகமதின் மிடியகல
வருள்புரிவை தருணமிதுவே
மணியொளிசெய் முடிதிகழ மயிலின்மிசை யினிதமரு
மறைமுதல்வ தமிழினிறைவா
மலரொழுகு நறைபெருக நனைகழலி னெழிலிலக
வளர்கழுகு மலைமுருகனே. (௧0)

பலகிளைக ளெனவிரியு மறைமுறைய மிடுமுயரு
பணிருகர மவையும்வாழ்க
பலவிரவி யுதயமென வொளிர்முடிக ளவைதிகழு
பரமனறு முகமும்வாழ்க
அலகிலுயர் மதுகைசெறி யணிதிகழ வளருமெழி
லமருபுய மவையும்வாழ்க
அகிலசர மசரமுத லெவையும்வளர் வுறவருளு
மணியவிழி மலர்கள்வாழ்க
உலகிலுறு மடியர்வினை தனையொருவ நிழலுதவி
யுயருமடி மலர்கள்வாழ்க
உயரவரு கொடியினொடு பசியசிகை விரியுமயி
லுலவியவை நணுகிவாழ்க
மலர்நிறையு முயர்தருவி னிழல்பரவு கழுகுமலை
வளமதுற வினிதுவாழ்க
வனிதைகுற மகளுமுயர் சுரவரச னவன்மகளு
மருவுகுகன் வாழ்கமாதோ. (கக)

(ஆகபதிகம் கக, பாட்டு கஉக.)

---

உ

சிவமயம்.

ஸ்ரீமுருகக்கடவுள் துணை.

பன்னிரண்டாவது

# கதிர்காம மஙலப்பதிகம்

காப்பு—வெண்பா.

கதிர்காம மாருங் கமழ்கடப்பந் தாரான்
கதிர்வேல னற்கழலைக் கண்ணிக்—கதிராரும்
ஓர்பதிகஞ் சாற்றவே யொற்றைக்கொம் பானைமகிழ்ந்
தேர்தருமென் னுவிலிருந் தே.

## ஆசிரிய விருத்தம்.

அணியேறு முடியாளர் நதிசேரு சடையாள
ரறுகேறு தொடையாளரோர்
அரவேறு பணியாளர் மதியாரு கணியாள
ரனலேறு மழுவாளரே
தணியேறு விழியாளர் புலியாடை யுடையாளர்
தருமானை யுரியாளர்பார்
தருபாத வடியாளர் கரமாரு துடியாளர்
தலைமாலை யணிதோளர்சீர்
நணியாரு முழையாள ருமைபாதி வடிவாளர்
நஞுமால மிடறுளரே
நமையாளு மடியாளர் நனிகாத லொடுதேட
நஞுமாதி முருகேசனே
கணியாத புகழ்சேரு முயரீழ வளநாடு
கணிமேவி யழகாகவே
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (க)

ஒளியாரு முடியேறு முகமாறு தருசோதி
யுலகேழு முறவீசவே
யுலவாத படைசாரு கரமான குழுமேவி
யுவராழி வரைசாடவே
யளியாரு தொடையாடு புயமீறி வெளியாரு
மணிநாக மொடுமோதவே
யருண்மேவு விழிபாயு நிறைவான பனிமேவு
மளிவாரி யெனநேரவே
தளியாரு தவிசேறி யிலகாதி யடிசோதி
தமிழ்நாடு நிறைவாகவே
தமரான துணைவீர ரொடுமேவி யினிதோடு
தருமாறு வளர்கோலனே
களியாரு மௌனஞான வழிமேவ வருளீவை
கையில்வேலை யுடைநாதனே
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (உ)

மலைமேவி வருமாது கடன்மேவி வளர்மாது
மகமேவி வருமாதுமா
மகவாகி யறுமாதர் தனமேவி யுணுபால
வளமேவு குமரேசனே
தலையாரு கரமேவு மதயானை யடியார்கள்
தமதாக வுறுபாசமார்
தருநீடு வனமீது விளையாடி யவைசாடு
தகையான பசுபோதமே
யுலைமாக வளமாக வுணுமார னெழிலான
வொருநீடு கனனடியே
யொடியார வவைசாடி நுகராதி களிறுன
வுவன்மேவு மிளையோனெனுக்
கலைமேவு முருகேச வெனைஞான வழிமேவு
கதியீவை குருநாதனே
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (௩)

விணிலேறு பொழின்மேவு மலைமீதி லிமையோர்கண்
மிகமேவி யடிகூவியே
விழைவான நலபூசை செயுமேல்வை மகிழ்வோடு
விழிநாடி யருளீகுவாய்
அணியேறு தனிமேவி யெவரேனு மறியாம
லழகான தவிசேறியே
யடைவோர்கண் மனமேவு வரமான தனையீவை
யழகேறு திருமேனியாய்
மணியேறு நதியாடி விதியோடு முனைநாடு
மனமேவு மடியார்கள்பால்
மயிலேறி வெளியாடி யெதிராக விளையாடி
வரமேவு மருளீவையே
கணியாத புகழ்சேரு முயரீழ வளநாடு
கணிமேவி யழகாகவே
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (௪)

மலையேறி யடிமேவி லதுமேன்மை யெனவோது
மறையாறு வருவோரெலா
மணியேறு நதியாடி யிரவாக வவண்மேவி
வருபோது துயில்வேலையே
நிலையான வவர்காண வருசோதி கனவாக
நெறிநாடி மலையேறுவார்
நிசமான தறியார்கண் முறைமாறி யவரேறி
னெறிகாண விலராவரா
யலைவார்க ணெறியோடு செலுவார்க ளிடையாம
லடிவார மதுசேர்வுறு
வணியாரு தளிமேவி யுனைநாடி மனமார
வடிதோய முடிசூடுவார்
கலையோடு பிணைதாவி விளையாடு வனமேவு
கனமான தளிமேவுவோய்
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (ரு)

தலையான சரியாவி லுறமேவி முறையோடு
தனைநாடு தவசீலரோர்
தகையான கிரியாவின் வழிநாடி யுனைமேவு
தவநீடு மவரோடுமே
நிலையான வளிமேவு மடயோகர் சிவயோகர்
நிறைகூடி யருகாரவே
நிகரான மிகுஞான நெறிமேவு தவராசர்
நெறியோர்கள் பலர்சாரவே
வலையான பசுபாச மவைநூறி யழகாக
வளர்சீலர் பதியாய்வரே
மலிவாகி யிருபோது மொருபோது மமர்வாக
வருவார்க ளருளீவையால்
கலையோடு பிணைதாவி விளையாடு வனமேவு
கனமான தளிமேவுவோய்
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (சு)

மறையோது முனிவோர்கள் கிடைதோறு மருக
மரமீதி லினிதார்வுறு
வளர்காடை கிளிபூவை யவையாவு மழகாக
வனமேவி மறையோதுமே
குறையாத தவசீலர் கணைமூடி யுறுபோது
குடையாக மயின்மேவியே
குளிரார நிழல்காண வழகான சிகைமூடு
குணமோடு பணியேயுமே
யிறையாக வுறுநாக மெவரோனு மருகாகி
யினிதோடு மளைபாயுமே
யிசையேறு புலிமேவு தவசீல ருறுசாலை
யெழில்காவ லதுவாகுமே
கறையேறு மயில்வேலை யினிதோடு கொளுமாதி
கணிஞடி யிவைகாணுவாய்
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (எ)

மழைமேவு பொழில்வானி லுறமேவி மலைநாலு
புறமேவ வதின்வாழுமேர்
மததாரை பொழியானை குழுவாகி யொருசேர
வருவோர்க ளருகாகவே
குழையோடு விளையாடி யுயர்வான சினைமேவு
கொழிதேனை யிறலோடுமே
கொளுபோதி லெதிராவ ரெவரோனு மவரோடு
கொடுபோகி யினிதீயுமே
யுழையோடு புலிகானி லுறவாடி யினிதாக
வுறுவோர்க டருமூணையே
யுணவாக் வுணநேரு முயலாதி யவைகாண
வுறவாக வதையியுமே
கழையோடு கழைசாடு மொலிவானி லுறுமீது
கணிலார நினிகாணுவாய்
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (அ)

எழிலான பொழின்மேவு தருநீடு சினையாரு
மினிதான மதுவோடுரு
விலகான மலர்மாரி நனையான துளியோடு
மெழில்சேரு மடி தூவவே
யொழியாது துதியோது மடியார்கள் விடிபோதி
லுயர்வான தமிழோதியே
யொளிமேவு மலர்மாரி தனைவார மொடுநாவி
னுரையோடு மடி தூவவே
விழியாத விழிமேவு சுரர்நாடி விரையாரு
மிகுமாரி மலர்தூவவே
வியமாக வினையாவு மலையாக வடிநோவ
மிகுமோவெ னுரைபேசுவார்
கழியான பிணையோடு கலைமேவி விளையாடு
கவினுடி யினிதாருவோய்
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (கூ)

வினையான பழமீனு விதையான பவமீதில்
வெருவாசை மரமேறியே
விழுபோதி லெவரேனு மெதிர்நேர்வ திலைகாலன்
விடுதூத ருறவாவரே
யெனையானு மறியாம லுனையேனு முணராம
லிதுகாறும் விழல்நீரென
விகலாடு புலனோடு மெலிவாகி யிதுபோதி
லிறையேயு னடிமேவினேன்
முனையான குறையாவு மினியோட மிகுமேழை
முதுபாத மதுமேவவே
முனியாது கனிவோடு தருவாயெ னிறையான
முருகேச சருவேசனே
கனைநீரி னதியோர முயர்வாக வளர்கோவில்
கவினோடு மினிதாருவோய்
கதிர்வீசு மதிசேரு பொழில்வானி லுறவேறு
கதிர்காம மலைவேலனே. (௧0)

கனமேவு சினையாரு பொழின்மேவி வளர்வான
 கதிர்காம மலையும்வாழ்க
கனிசோதி வடிவான வெழிலேறு முருகேசர்
 கவினேறி நிதமும்வாழ்க
இனமான முகமாறு மருள்சேரும் விழியாவு
 மினிதாக நிலவிவாழ்க
விகல்சாடு கரம்யாவு முயர்வான விரிதோளு
 மிசையேறி நிதமும்வாழ்க
வனமேவு சிகிசேவல் மலராரு மடியாவும்
 வளமேறி யினிதுவாழ்க
மருமேவு குறமாது சுரர்மாது புயமேவி
 மலர்வாகி யணுகிவாழ்க
தனதான வடியார்கள் தமிழ்வேத மிவையாவு
 மினிதோடு தாவிவாழ்க
தணியாத முகில்பானு மதிவான முலகாதி
 தகவாக வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் கஉ, பாட்டு கஙஉ.)

---

உ

சிவமயம்.

ஸ்ரீமுருகக்கடவுள் துணை.

பதின்மூன்றாவது

# எட்டிகுடிப் பதிகம்.

காப்பு—வெண்பா.

எட்டிகுடி வேல னிலங்கு திருவடியி
லிட்டமுட னோர்பதிக மேற்றவே—சிட்டர்
தொழுங்கரியை யுன்னினேன் றோற்றியென்னு ணின்றே
யொழுங்கருளி முற்றவரு ளும்.

செக்கர்நிற மதுமேவு முக்கணதி ஞெளிதாவு
சிற்சுடரி னுறுசோதியார்
சிற்சபையி னடமாடு மத்தமணி பரமேசர்
செப்பமொடு தருபாலனே
நக்குமொளி யதுபாவு பொற்றளியி லினிதாக
நட்பிஞெடு வளர்சேயனே
நட்டமிடு மயின்மீதி லுற்றமரு முருகேச
நத்தர்பணி குருநாதனே
தக்கன்மக ளானுநாமம் விட்டகல மலைமேனை
தட்பமுறு மகவாகியே
தக்கவய துறவீசர் பக்கமுறு முமைதேடு
சற்குமா வெனையாளுவாய்
இக்கலியின் மிகுதேவ பொக்கமிலர் மனபாவ
வெற்படுந லெழின்மேனியோய்
இட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (௧)

மச்சமுறு கொடிமேவி யட்டதிசை யவைதாவி
மற்படுந லிசைமீறியே
மட்டொழுகு மலர்மாலை கட்டுமுடி யதுசூடி
வைப்பிதனை யரசாளுவோய்
செச்சையணி புயவீர துட்டர்தமை யொழிதீர
சிட்டர்தமை யருள்சூரனே
சிற்சொருப னெனவேத மெட்டியடி தொடநீடு
சித்துவடி வுறுநாயகா
பச்சைமா கதமேனி யுற்றபரை சிவைதேடு
பத்மபத குமரேசனே
பட்சமுட னடியார்கள் பக்கமதில் விரைவோடு
பற்றிவரு மறுமாமுகா
விச்சைதனை முடிவேற விப்பொழுதி லருள்தீர
வெற்குலகி லெவர்தேவரே
இட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (௨)

கொத்தலரு மலர்மாலை தந்துபுய வெழிலாரு
கொற்றமிகு மொருசேயனே
கொட்டமிடு பலசூர ரிட்டமொடு முயிர்சாடு
குத்தயிலை விடுதீரனே
பத்தெனுறு தலையோடு முட்டவனின் வலிமாய்வு
பற்றவொரு கணையேவுவோர்
பட்சமுறு மருகாவெ னக்குரிய முருகாபல்
பக்கமுறு சிறுவாமுனுள்
சித்தனென வனமேவி யுற்றகிழ வனுமான
திட்பமுறு மரமானவா
செட்டிவடி வொடுநாடி யிட்டவளை யலினோடு
திட்டெனவு மறைபூதனே
யித்தரணி புவிவான மொக்கவினி துடனுடி
யிச்சையுட னமர்காரணா
இட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (௩)

துற்றமொளி நகுசோதி யுற்றமுடி யதினோடு
துப்புலவு கனிவாய்கனே
சுத்தவெயி லதுவீசி யுற்றமுக விருமாதர்
தொட்டபுய வெழிலாரவே
பற்றிவளர் கரமேவி யுற்றபடை யதினோடு
பற்றுமயில் வெயில்வீசவே
பத்தரின மடிசூழ மிக்கவெழி லதுமேவு
பச்சைமயில் தனிலேறியே
யெற்றிகழு மடியாரு பொற்கழலி னொடுமேழை
யெற்குமுனி லினிதாடுவா
யிக்குவிலன் விடுவாளி தைத்துழலு மடியேனை
யிப்பொழுதி லருள்சீலனே
யிற்றுவிழு மசுரேச னுற்றதவ மதனாலு
னிட்டமல ரடிமேவினா
னிட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே (௪)

அத்தமொடு தனமாதர் நத்துபுவி தமிலாசை
யற்றுவிட வருகாலனு
ரச்சமதை நினையாது முத்தவுன தடிமேவ
வற்பினொடு முனைநாடினேன்
பெத்தநிலை யதுமாறி முத்திநிலை தனைநாடு
பித்துமிக வுளதாகியே
பெற்றியுறு மருளேறி யுற்றவிழி தனைநேரு
பெட்புமிக வருளீவையே
பத்தருறு துயரேக நற்கருணை செயுமாதி
பக்கமதி லெனையாளுவாய்
பட்சமினி நழுவாது வைத்தருள்வை முருகேச
பற்றுனடி யதையோருவாய்
இத்தரணி புவிவான மொக்கவினி துடனுடி
யிச்சையுட னமர்வீரனே
யிட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே (ரு)

அற்பருற வதைநாடு பொய்க்கடலின் மிகமூழ்கி
யற்பரவு மயலாறிலே
யற்றவர்க ணிகராகி யுற்றறிவு தடுமாறி
யச்சமது மிகவாகியே
கற்பவர்க ளுறவோடு கற்றவர்க ளிடைநாடு
கற்பணுவு மிலையாகவே
கட்டமதை யணுகாது பொற்புடைய வடிமீது
கற்புடைய வெனநாடினே
னெற்பரவு முகமாறு மொய்த்தொழுகு மருளேறு
மெற்குடைய குருநாதனே
யித்தருண மடியேனை நற்றுறையி லுறவாக
விச்சையுட னருளீவையே
யிற்புறுக லருளாளர் கட்புலனி லுறலோடு
மெத்திசையு மமர்சோதியே
யிட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (சு)

சத்தியமி லவர்பாலி னுற்றுழனு மறிவோடு
தட்டழியு மொருநாளிலே
தக்கமதி யதினோடு சிச்சியுல கெனமீறு
சத்தறிவு தனைநாடியே
புத்தியொரு வழியாகி யிப்பொழுது னெழில்சேரு
புட்பவடி தனைமேவினேன்
பொக்கமுடை யனைநேரு நற்கருணை யுடனுள்வை
பொற்புமிகு குமரேசனே
பத்தியுடை யவர்சூடி ரத்நமணி யடிமேவு
பட்சமுட னெனையாளுவாய்
பக்கமுறு மிருமாதர் துய்க்குமொரு கனியான
பச்சைமயி லமர்வாகனு
யித்தரணி புவிவான மொக்கவினி துடனுடி
யிச்சையுட னமர்வீரனே
யிட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (எ)

அப்புநிறை புனலுடு நத்துமுயர் பதிமீதி
லற்புதம தெனவாருவோய்
அக்கமணி திருநீறு மொய்த்தொளிசெய் தணியேறு
மத்தாருள் குமரேசனே
யிப்புவியி னிறைவான பற்பல மலையின்மீதி
லிச்சையுட னமர்லோலனே
யெக்கரிடு பொனியாறு பக்கமுறு வளமேவு
மிப்பதியி லமர்நாயகா
கொப்பமுறு கரிபோல நற்றரள நகைமாதர்
கொற்றமுறு மயல்சார்வனோ
குட்டியயன் மனநோவ வைத்துமிகு களிமேவு
கொற்றமுறு சிறுசேயனே
யிப்புவியி லெடுவான மொக்கவினி துடனுடி
யிச்சையுட னமர்வீரனே
யிட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (அ)

செற்றமதி னுறவேது நற்பொறுமை யுறவாகு
சித்தமதை யினிதாகவே
செப்பமொடு தரவேணு மொப்பரிய வடிவான
சிற்பரை யினொருசேயனே
கொற்றமுறு நமனுரை யெட்டியதி தொலேயேவு
கொற்றமதை யினிதீவையே
கொக்கிறகு தலைமாலை பக்கமுறு மதிசூடு
கொத்திதழி யணிவார்சுதா
பற்றுமொரு மிடியோடு சிற்றறிவு முடனேகு
பத்தியதை யருள்வாய்குகா
பத்திமையின் வழியான முத்திசெலு நெறிசேரு
பக்குவம தனையீவையே
இத்தரணி யொடுவான மொக்கவினி துடனுடி
யிச்சையுட னமர்சேயனே
யிட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (கூ)

சத்தெனவு மதினோடு சித்தினிமை யெனலான
தற்பரனி னெழிலார்சுதா
சர்க்கரை யினொடுபாகு புத்தமுத மதுசேரு
தக்கசுவை மயமானவா
பித்தெனவு முலகோர்கள் வைக்குநிலை யுயர்வான
பெற்றிதரு நிலையாகுமே
பெட்புமிகு மடியேனை முத்திநெறி யதின்மேவு
பித்தருளி யினிதாள்வையே
மத்தமத மிகவூறு கொற்றமுறு கரிநாடு
மட்டிழியு மலர்மாலையாய்
வைத்தநிதி யெனவேழை புத்திதனி னடமாடு
வச்ரமுடி யதுசூடுவோ
யித்தரணி யொடுவான மொக்கவினி தடனுடி
யிச்சையுட னமர்சேயனே
யிட்டமிகு வளிலோல கட்டழகி சிவைபால
வெட்டிகுடி வடிவேலனே. (௧௦)

எட்டுபுக ழதுமேவு சிட்டர்தொழு முயர்வான
வெட்டிகுடி யதுவும்வாழ்க
விட்டமுட னெழின்மேவு கட்டழகி தருவேல
னிற்பெருகி யினிதுவாழ்க
மட்டொழுகு மலர்மாலை கட்டுமுடி முகமாறு
வைத்தவிழி யவையும்வாழ்க
மற்பொரு புயமதோடு கைத்தலமு மவையாதி
மற்றுமவை தினமும்வாழ்க
சிட்டர்தொழு மடிமாதர் பச்சைமயி லொடுசேவல்
செப்பமொடு தினமும்வாழ்க
சித்தர்முனி வரர்தேவர் பத்திமிகு மடியார்கள்
சித்தியொடு தினமும்வாழ்க
விட்டமொடு புவிவான முற்றமதி ரவியாதி
யெத்தினமு முயரவாழ்க
விச்சைமிகு தமிழ்நாடு கொற்றமுறு தமிழாதி
யிச்சையுடன் வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் கங, பாட்டு கசங.)

---

உ

சிவமயம்.

ஸ்ரீமுருகக்கடவுள் துணை.

பதின்மூன்காவது

# திருச்சிக்கற் பதிகம்.

காப்பு—வெண்பா.

பூவாருஞ் சிக்கல் புரக்கும்வடி வேலனுக்கு
நாவாரு மோர்பதிகம் நன்கியற்றப்—பூவாருஞ்
செம்பதுமத் தாளோங்குந் திண்கரியை யுள்ளமதி
னம்பியருள் பெற்றனனிந் நாள்.

## ஆசிரிய விருத்தம்.

புட்குழுமி யுழுதாரு மட்டிழியு மலர்மாலை
பொற்பினொடு மணிமாபுயா
புத்தர்தலை தரைமீது தத்திவிழ விசைபாடு
புட்பநிகர் மணிவாயனே
விட்புலம துறுவோர்க ளர்ச்சனைசெய் மலர்மாரி
மிக்குமலை யெனவாரவே
வித்தகம தளிபாத பத்மமதை மலர்மூட
மெய்த்தவர்க ணனிதேடுவார்
கட்புலனி லுறுசீத மொய்த்தவனி யெளியோர்கள்
கட்புலனி லுறகேருமே
கட்டமுறு மெனைவாது விட்டகலு நெறிசேரு
கட்கருணை யுதையீவையே
திட்பமுறு மயிலேறு கொற்றமழ களிறுன
செச்சையுணி முருகேசனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (௧)

மெய்க்கணிய தெனவோது பற்பமதை யழகாக
விற்பரவ நனிபூசியே
மிக்குயரு பதமீயு மக்கமணி யதைமேனி
விட்டிலக நனிசூடியே
தக்கதொரு சிவநாம மத்தையினி லுறநாவி
சைத்துயரு தகைசாரவே
தத்துவம தனின்மேவி யெட்டியுறு மூனைநாடு
சத்தியினை யினிதீவையே
கைக்கணிய தெனவேலை வைத்துமயின் மிசையேறு
சற்றவர்கள் தொழுபாதனே
கட்டமுறு மெனைவாது விட்டகலு நெறிசேரு
கட்கருணை யதையீவையே
திக்குயரு புகழேறு கொற்றமழ களிறுன
செச்சையணி முருகேசனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே, (௨)

புத்திதனின் மனைமாடு சுற்றமொடு புவியாசை
பொத்தியுற மயலாறிலே
புக்குழலு மடியேனை நற்கருணை யதிலோடு
பொக்கமற வினிதாள்வையே
வைத்தநிதி பொருள்யாவு மொக்கவரு மெனநேரு
மட்டிமதி யுடையார்கள்பால்
வைத்துழலு முறவேக வித்ததியி லுணர்வாக
மட்டிழியு மடியீவையே
நத்தணியு முலைமாது பத்தர்தொழு திருமாது
நக்கர்தழு வியமாதுமா
நத்திமுலை வருபாலை யுய்த்துதவ வுணுமாதி
நற்றமிழ்செய் மறைவாயனே
தித்தியென நடமாடு கொற்றமுறு மயிலேறு
செச்சையணி முருகேசனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (ரு)

நற்றிசைநல் புவிவான மொத்ததிரு முகமாறு
நத்துமணி முடியாறுமே
நற்கருணை பொழிவான பத்திருநல் விழியோடும்
நச்சுமுயர் புயமோடுமே
யுற்றிலகு மலரான கொற்றமுறு கரமாதி
யொத்திலக வொளிவீசவே
யொப்பரிய மயின்மீதி லற்புதம துறவேறி
யுத்தமர்கள் தொழுதாருமோர்
துற்றுமலர் நிறைபாத பத்மமொடு மிருமாதர்
துய்க்கவமு கொடுமேவவே
சுற்றிவரு நவவீரர் மொய்க்கவினி துடனேரு
சுத்தமுறு தவிசாருவோய்
செற்றமுறு மயிலாரு கொற்றமழு களிறுன
செச்சையணி முருகேசனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (சா)

கொத்தலரு மலர்மார்ப நித்தமலர் முகமேவு
கொற்றமுறு குமராகுகா
கொட்டமிடு குணமாறு பட்டொழிய வதிலான
குற்றமது குடிபோகவே
சித்தமதி னலதான பத்தியொடு முயர்வான
திட்பவறி வதையீகுவாய்
சிற்பரம தெனவேத முற்றுமுறை யதுபாடு
சித்சொருப வடிவேலவா
பத்தர்குழு நிறைவோடு மொய்த்தடியின் மலர்தூவு
பட்சமதை யெவர்பேசுவார்
பற்றுமவர் மிடிதீர வுற்றருளி யினிதோடு
பக்கமுற வருளீவையே
தித்தியென நடமாடு கொற்றமுறு மயிலேறு
செச்சையணி முருகேசனே
செக்கர்நிறை விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (ரு)

இட்டமொடு சுராசன் மொட்டலரு மலர்வேத
னிக்கன்வரு திருமாலுமே
யெய்த்தவுண ரொடுசாடி நட்டமுற வடிதேடி
யிச்சையொடு மலர்தூவியே
கட்டமற வெமையாள்வை கந்தவென வருளோடு
கட்கருணை பொழிவேலவா
கச்சிறுகு முலைமாது வுத்தமிநன் மலைமாது
கைக்குள்வள ரணிசேயனே
நட்டமிடு சுரமாதர்மொய்த்தணிய தொடுநாளும்
நத்துபணி புரிமானனூர்
நற்சுகம தனைநாளு முற்றுநுகர் குமரேச
நக்கரருள் மலைவாசனே
திட்டமுட னுலகாளு கொற்றமழ களிறுன
செச்சையணி முருகேசனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (சு)

தத்துவ மதனையொரு முத்தர்பர சுகமாரு
தற்பரம துணர்யோகரே
சத்துவம துடனுடு சுத்தவடி வுடனீடு
சற்சனர்க ளுறவாடுவோய்
புத்தமுத மதிநேடு வுய்த்தமது முதுபாகு
பொற்பதுறு சுவையானவா
பொக்கமிலர் பரமேவி யிச்சையது நிறைவேறு
புத்தியருள் குமரேசனே
யெய்த்தவிடை யுமைமாது நத்துமொரு சுதவேழை
யிட்டமதை யருளீவையே
பெற்குமொரு கெதியேது சித்தமதி லுறுதீநி
லெய்த்திடுத லதுஞாயமோ
தித்தியென நடமாடு கொற்றமுறு மயிலேறு
செச்சையணி புயவீரனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (எ)

மட்டிழியு மலர்மாலை யுற்றமணி முடிசூடி
மட்புலம தரசாளுநாள்
மற்றுநிக ரிலதாகி யுற்றதமிழ் வளநாடு
வைத்திடுந னிலைபோலவே
கட்டமுறு மிதுபோது கட்கருணை யதையீவை
கத்தவினி நலகாலமே
கச்சிநகர் தனின்மேவி நற்றவம தனைநாடு
கட்டழகி யருள்பாலகா
துட்டமதன் விடுவாளி பட்டுழலு மடியேழை
துய்க்கவடி மலரீவையே
சுத்தவடி வமதான வத்தருள் குமரேச
சொர்க்கமது வெகுதூரமோ
திட்டமுட னுலகாளு கொற்றமழ களிறுன
செச்சையணி புயவீரனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே (அ)

மைக்கணியர் முலேமேவி யெய்த்தவிடை யதினோடு
வட்டமிட நடமாடியே
மட்டிழியு மலர்மாலை கட்டுகுழ லதுதாழ
வைத்துலவி விளையாடியே
கைக்கணிய வளையார மெய்க்கணிய வணியோடு
கச்சவிழ வருமாதரார்
கக்கமதின் மயலோடு புக்குழலு மிதுவேலை
கட்கருணை தனையீவையே
சக்கரமு முயாரழி கைக்கொடெழி லுறுதேவர்
தற்கினிய மருகானவா
தட்பமுறு மடிமீது நித்தியமு மலர்தூவு
சற்குணம தருள்வாயையா
திக்குயரு புகழேறு கொற்றமழ களிறுான
செச்சையணி புயவீரனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (௯)

அப்பணியு மரவேறு செப்பரிய சடையாள
ரத்தரினி மையரானவோ
ரக்கறுகி தழியோடு துற்றுமதி யதுசூடு
மப்பரருள் முருகாகுகா
வொப்பரிய திருநீறு பற்றுமொளி யதுவீசு
முத்தமந விளையோய்சுகா
வுற்றபல பிணியேக நற்றவம தனிலாக
வொட்டுமருள் தனையீவையே
தப்பரிய ரெனவேர்து முத்தமந லடியார்கள்
சற்றுமுனை யகல்வார்களோ
தத்துவம தறியார்கண் மெய்த்துணையை யறியார்கள்
சத்தியமி தறிவாயையா
செப்பமுட னடமாடு கொற்றமயி லினிலேறு
செச்சையணி புயவீரனே
செக்கர்நிற விறைபால பக்கமுறு வளிலோல
சிக்கல்வளர் வடிவேலனே. (௧0)

திக்கதுறு புகழேறு தக்கதொரு பதியான
சிக்கனக ரினிதுவாழ்க
செச்சையணி புயவீர னத்தனறு முகநாத
சித்தனினி தினிதுவாழ்க
தக்கவிழி கரமாதி யெட்டுபுய மிவையேறு
சத்தியுட னினிதுவாழ்க
தட்பரவு மயில்சேவல் பத்மமல ரடியாரு
சத்சுகம தினிதுவாழ்க
ஒக்கலுறு மிருமாதர் துய்த்தபர சுகமேவி
யுற்றவிரு புறமும்வாழ்க
ஒப்பரிய குகனுடு நற்றலமு மவையாவு
மொத்துலகி னினிதுவாழ்க
இக்கலியி லுயர்வான கொற்றமுட னருளாரு
மிட்டமுறு தமிழும்வாழ்க
இத்தரணி மதிபானு விட்புலனு முகிலாதி
யிச்சையுடன் வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் கச, பாட்டு கருச.)

---

உ

சிவமயம்

ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

பதினைந்தாவது

## புள்ளிருக்கும் வேளூர்ப் பதிகம்.

காப்பு—வெண்பா.

புள்ளிருக்கும் வேளூரின் பொற்பா ரெழிற்கோயி
லுள்ளிருக்கு முத்துக் குமாரனுக்குக்—கள்ளிருக்கு
மோரார்பதிக மியற்ற வகத்திருக்குங்
காரானை செம்பொற் கழல்.

## ஆசிரிய விருத்தம்.

புட்பத்தின் மேலான பத்மத்தை நேர்பாத
புட்பத்தை யான்மேவியே
பொய்க்குப்பை யாமீன மைக்கொத்தை யேசேரு
பொக்கத்தை யேமோதியே
விட்பற்று மேலோர்கள் வைத்திட்ட நூலாறு
விட்டிட்ட மாணூறியே
மெய்ப்பற்றை யேநாடி யற்பத்தின் மேலாசை
விட்டுப்பி ணுணர்வனே
கட்பற்று வார்காணு விற்பற்று மாமேனி
கட்டிட்ட மாநாயகா
கட்டத்தை வாராம விட்டத்தை நீயீவை
கட்கத்தை யேசேர்கரா
முட்பற்று மேர்தாழை நட்பைக்கொ ணீர்வேலி
மொய்த்திட்ட மாநாடுளாய்
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (க)

செக்கச் செவேயான நக்கர்க்கு மாலாசை
தித்திக்க வேநேருவோய்
சிக்கிக் குலாமாதர் பக்கத்தி லேமேவு
சித்தத்தை நீபாறுவாய்
திக்கெட்டு மேயோடி யத்தத்தை யேதேடு
சிற்புத்தியே போகுமோ
தெற்குத் திசாமேவு கொற்றத் தரேகாலர்
தெற்றற் கிடாதேனுவாய்
பக்கத்தி லேசேரு மெய்ப்பத்தி யேயீவை
பத்தர்க்கு நேராகுவோய்
பட்சத்தி னுன்மேவு சித்தத்தை யேகாணு
பக்கத்தி லேகாவையே
முக்கட் குலாவீச ரிச்சைக்கு மாலீயு
முத்திக்கு மேலானவா
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (உ)

நத்துக் குலாவாழி யத்தத்த னேவேத
னத்திப்பரா வீசனே
நட்புக்கு நேராகு சித்தத்த னேதாளி
ஊனப்பற்ற நீயாளுவாய்
பெத்தத்தி லேயாருன் மத்தர்க்கு நேராத
பெற்றிக்க ணூர்பாலனே
பெட்பிற் படாதான புத்திக்கு நான்வாடு
பிச்சுக்கு நீநேருவாய்
மத்தத்தி லேதேறு மத்திக்கு நேரான
மட்டுற்ற தோண்மாலையாய்
வைப்புப் பொனேபோல வெற்குத் தனுதான
வச்ரக் கலாபாளனே
மொய்த்துப் புலானூறு கொற்றத் தையார்வேலை
முற்கைக்கு நேர்வீரனே
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (௩)

பத்திக் குளேயாடு கொற்றக்க ழால்வீர
பட்சத்தை யேயீகுவாய்
பற்றிப் பராவேழை சித்தத்தி னோராசை
பக்கத்திலே நேர்தராய்
சித்திக்கு மாலாகு கட்டத்தர் நோய்தீரு
செச்சைப்புயா வேலனே
சிற்சத்தி மாதேவி பக்கத்தி லேமேவு
திட்பச்சுதா நாகனே
யெத்திக்கு மார்பாத பத்மத்தை யேயேழை
யிட்டத்திலே சேர்தரா
யிக்குப்ப ணூர்வேத மற்புற்று நாளேதை
விச்சைக்கு நீநேருவாய்
முத்திக்கு மாலாகு சித்தர்க்கு நேராக
முற்பட்டு வாழ்வீகுவோய்
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (௪)

கட்டத்தி னல்வாடு சித்தத்தி னன்மாதர்
கக்கத்தி னன்மான்மிகாக்
கற்றத்தி னனுடு சுற்றத்தி னலாவி
கைச்சத்தி னனேயுரு
நட்டத்தி னல்வீணர் பக்கத்தி னலீனர்
நட்பத்தி னலோகைபோய்
நச்சத்தி னல்வாட லொத்துப்பின னடி
நச்சித்த னன்மேவினேன்
இட்டத்தி னனீடு முத்தர்க்கு மேல்வீடு
மிச்சித்து நீயீவையா
லெற்குப்பி னேயாரு சுற்றத்தர் நீபாரு
வெய்த்தெய்த் திடாதாள்வையே
மொட்டற் றிடாமாலை மொய்த்துப் பாராயேறு
முத்திக்க ணார்நாயகா
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (ரு)

செக்குக்கு ளேசேரு மெட்கொத்து நான்வேறு
திக்கற்று மாலாகியே
தித்திக்கு மோர்பாத பத்மத்தை யேதேடு
சித்தத்தி னனுடினேன்
கொக்கற்று நேர்வீழ நெட்டிற்ற வேலேவு
கொற்றப் பாராவீரனே
குக்கற்கு மேகீழ்மை யுற்றிட்ட பேயான
கொச்சைக்கு நீநேர்வையோ
திக்கெட்டு மேயாரு மொப்பற்றசேயான
சித்ரச் சிலாரூபனே
சித்தத்தி னனுளு நத்தித்த னுதாரு
திட்பத்தை நீயீவையே
முக்கட் குலாவீச ரிச்சைக்கு மாலீயு
முத்திக்க ணார்வேலவா
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (சு)

அப்புக் குளேயாரு மொக்குட்கு நேரான
வற்பக்கு வார்வாழ்வையே
யச்சற்று நீடூழி யொப்பித்த ஞதாசை
யத்திற்க ளேபாரமாய்ச்
செப்பிப்பெ ஞர்மாடு வொட்டிட்ட பூவாசை
சித்தத்தி லேதாவியே
சிக்கித்த ஞலாவி யெய்த்துப்பி னேதேடல்
சிச்சித்து தூஞயமோ
தப்பற்று நேரான மெய்ப்பற் றுளார்தேடு
சத்சித் சொரூபானவா
தக்கற்கு நோதி குற்றத்தி ஞன்மேவு
தற்பிற்கு மேலானவா
மொய்ப்புட் குழாமாடு துற்றத் தொடாமாலை
மொய்த்தப் புயாவேலவா
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (எ)

எட்டெட்டு மேலாரு மெட்டெட்டு மேலாரு
மெட்டெட்டு மாயானதோ
ரித்தத்து வாரூப மொப்பிப்பின் மேலேறி
யெட்டிச்செல் போதாருமோர்
மட்டற்று நேர்சோதி யைப்பற்றி மாலாக
வைத்துக்கொள் வாய்வேலவா
மக்கட்கு மாநீதி யைக்கற்று நேராக
வைத்தற்கு மாலாகினேன்
இட்டத்தின் வாறாக நற்சித்த மாயீவை
யெற்குப்பி ஞரேயுளா
ரிப்பற்று மாலான வப்பற்று மேவேறு
மெப்பற்றுமே வேணுமோ
மொட்டற் றிடாமாலை மொய்த்துப் பாரயேறு
முத்திக்க ஞர்நாயகா
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (அ)

கொற்றத்தை யேமாலை யொப்பக்கொண் மாலேறு
கொற்றத்த னும்வீரனே
குப்பத்தை யேநேரு துட்டக் குழாமான
குற்றத்தர் மாசூரனுர்
சுற்றத்தர் தாமேவ லுற்றுத்த மாரோடு
துற்றிட்ட போராடியே
துய்த்திட்ட மாபோக மொட்டுக்கு வீணாகு
சொர்க்கத்தி லேயேறவே
யெற்றித்த மால்வாளை யிட்டுக் குகாகாவெ
னச்செப்பி யேசாரவே
யெட்டித் தழீஇமேனி தொட்டுக் குலாயாவி
யிட்டுக்கொண் மாவேலவா
முற்றத்த னுதாசை யற்றுக் கழான்மேவு
முத்தர்க்கு வாழ்வானவா
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (கூ)

பச்சைப் பசேலான மெய்ப்பற்று மாதேவி
பட்சத்தொ டேதாவியே
பக்கத்தி லேமேவ வைத்துக்கொண் மாதேவர்
பற்றுகொண் மாசேயனே
செச்சைப் புயாதேவர் மொய்த்துக் கழான்மேவு
தித்திக்கு மால்ரூபனே
செற்றத்தை யேபோக விட்டுக் கலாவீசு
திட்பத்தை யேயீவையே
மச்சத்தை யேநீடு கட்கத்தை யேநேரு
மைக்கட் குலாமாதரார்
மட்டுற்ற தேனூறல் மொய்த்துக்கொ ணுயேனை
வைத்துக் குகாகாவையே
முச்சத்தி யோடாரு மொய்க்கொற்ற வாகாநன்
முத்திக்கு மேலானவா
முத்துக் குலாமாதர் நத்திக்கொள் வேளூரின்
முத்துக் குமாரேசனே. (கO)

செக்கச் செவேலான பொற்புற்ற மாமேனி
திக்கெட்டியே சோதியார்
தித்திக்கு மேலான முத்துக் குமாரேசர்
திட்பத் தொடேவாழ்கவே
யொக்கக் குலாயாவி யொப்பப் பராய்மாத
ரொட்டித்தழீஇ வாழ்கவே
யொத்திட்ட மாவாசி யுற்றிட்ட மாசேவ
லொப்பிப் பராய்வாழ்கவே
யக்கக்க மாமாலை துற்றிட்ட மாவீச
ரத்திக் குலாய்வாழ்கவே
யப்பர்க்கு மேலாக வுற்றிட்ட மாதேவி
யத்தத்தி ளுள்வாழ்கவே
பக்கத்தி லேமேவு கொற்றக் குலாவீரர்
பட்சத்தொடே வாழ்கவே
பத்திக்கு மேலாகி யுற்றச் சிவாநேசர்
பற்றுற்று வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் கரு, பாட்டு கசுரு.)

---

உ

சிவமயம்.

ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

பதினாறுவது

## திருத்தணிகாசலப் பதிகம்.

காப்பு—வெண்பா.

தருவார் தணிகா சலமேவு மெங்கள்
முருகார் முருகனடி மொய்க்கு—மருவார்
பதிகந் தழைக்கப் படருமென்ற னெஞ்சிற்
கதிகந்தி ளுனை கழல்.

## ஆசிரிய விருத்தம்.

அளியா ரெருக்கரவ மறுகார் சடைப்பரம
ரருளா லளித்தகுமரா
வணியா ரெழிற்குமரி மலைமா தினித்தவுய
ரமுதே யருத்துசிறுவா
களியா ரினித்தமத மதுவே பெருக்குமொரு
கரிமா முகற்கிளையவா
கனியார் தமக்கெதிரில் வரவே யொழித்துலவு
கருணு கரக்குரிசிலே
யெளியார் மனத்தையொரு தளியாக வுற்றருள்செ
யிறையே யறக்குழவியே
யிடையா தெனைத்தினமு மருளே யளித்துனடி
யிசைபாட வெற்கருளுவாய்
தளிமேவி யுற்றவொளி விணிலேறி மொய்த்துலவு
தகைசே ரெழிற்குலவியார்
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கருள்
தணிகா சலக்கடவுளே. (க)

கதிர்வீசி ரத்நமுடி யழகாக வைத்தொளிரு
கவிஞரு செக்கர்முகமே
கனிவாகி மிக்கொளிர வினிதேறு கட்கருணை
கடல்போல மொய்த்தொழுகவே
யதிர்சேரு நற்றரள மணியார மொய்த்திலகு
மணியார் புயக்குழுவதே
யழகாக வுற்றிலக வினிதோடு முற்றடிய
ரவர்பான் மிகக்கடுகியே
யெதிராரு கைத்தலம தெழிலாக மிக்கொளிசெய்
தினிதார நற்கமலமே
யெனவேர் சிறக்கவள ரடிமா மலர்க்கழல்க
ளிசையேறி நிற்றொளிரவே
சதுரா மனத்தவிசி லினிதாக வுற்றுவளர்
சமரா குகக்குமரனே
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கருள்
தணிகாசலக் கடவுளே. (உ)

ஒருமா மயிற்பிடரி லினிதேறி யித்தரணி
யுலகாதி யெத்தலமுமே
யொருநாழி கைப்பொழுதில் விளையாடி யுற்றடையு
முமைமா தளித்தமதலாய்
தருமேவி யுற்றுவளர் சுராரச னுக்குவரு
தணியாத துக்கமதையே
தருசூர னைப்பொருது சமராடி வெற்றிகொடு
சசிநாத னுற்றபதியே
மருவா யெனக்கருணை புரிவேல கொற்றமுறு
வடிவே லெடுத்தகரனே
மருவார் கடப்பமலர் புயமேவி மொய்த்தருக
வளர்சீ வருக்கருளுவோய்
தருவா யெனக்குனரு ளதிதாக முற்றுவரு
ததியீ தினித்தகுமரா
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கரருள்
தணிகா சலக்கடவுளே. (௩)

அடியார் தமக்கெளிய னெனவே முழக்கமிடு
மருமாமறைக் குழவியே
படியார மொய்த்துவிழு சுராதி யர்க்கினிய
வருளே யளிக்குமுருகா
கொடியார் தமக்கெதிரு நினைவே யறக்கடிசெய்
குமராவினிக்கு மொழிசேர்
கொடியார் தமக்குனிரு புயமே யளித்தருளு
குருவே யறக்குரிசிலே
மிடிதீர நற்கிருபை தருவா யெனத்தொழுத
விறலோர் தமக்கருளுவோய்
மிடிதீர வெற்குமுன தருளே யுளத்துறுதி
விடிலோ வெனக்குரியரார்
தடியாத துட்டமதி யுறுவோ ரறக்கருணை
தருவா யயிற்கொளுசுதா
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கரருள்
தணிகா சலக்கடவுளே. (௪)

மறையாக மத்தொளிசெய் வடிவே யெனக்கினிய
மதுவே தழைத்தமுதலே
வளமார் தமிழ்க்குயரு குருவே யரற்குமொரு
மனமா ரினித்தசுவையே
முறையாக வுற்றதமிழ் மறையே சிவச்சமய
முறையே நிறுத்துகுருவே
முதலாக வைக்குமொரு பொருளே தமிழ்க்கரசு
முனிநா டளித்ததுரையே
இறையோர் கொழித்ததமி ழுதினோர் கலக்கமதி
னிகலே யொழித்தமதலாய்
யினிநீ யொளித்திடுத லழகோ வெமக்குறுக
ணிடரே யகற்றியருளாய்
தறையோ ரலக்கணுறு ததிபாரி னிப்பொழுது
தருகா தடுத்துவருவாய்
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கருள்
தணிகாசலக் கடவுளே. (ரு)

கனியே கனிக்குளுறு சுவையே சுவைக்குரிய
கனலே கருப்பிரசமே
கதியே கதிக்குளுறு நலமே பரப்பியொளிர்
கவினே கனத்தவொளியே
பனியே பனிக்குளுறு நளிரே மிகப்பெருகு
பதமே பதத்தலைவனே
பதியே பதிக்குளுறு பொருளே சிரத்தொளிரு
பயனே விரித்தமலரே
யினியே தெமக்குமொரு துனியே யறக்கருணை
யிதுவோ குறத்திகணவா
விசையோடு நற்பதிக மதையே தொடுக்கவரு
ளிறையே யெமக்குடையனே
தனியே யிளைத்துவரு மெனையா தரித்துலகு
தழைவே பெறற்கருளுவாய்
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கருள்
தணிகாசலக் கடவுளே. (சு)

வனமேவு நற்குறவர் மகளா ரிருக்குமெழின்
மகமா முனிப்பெருமனே
வரவே யுணர்த்துமொழி தனையே நினைத்தரிய
வனமேவி நற்கிழவனு
யுனைநான் மணப்பலென வுரையாட நற்றமர்க
ளுறமான்ம ரத்துருவமா
யுறவேடர் நிற்றகல மொழியே மறக்கவினி
யுதவா தெனக்கருதியே
கனமா மதக்கரியை யுனவே வரக்கனிகை
கணிலே யுறப்பயமொடே
கருதா துனைத்தழுவ வினிதோடு துய்த்துயரு
கனமாய் மணத்ததுரையே
தனமே யழுத்தவளர் புயமே குழைத்திலகு
சமரா குகப்பெருமனே
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கரருள்
தணிகாசலக் கடவுளே. (எ)

வினையா லிதற்குமுன முறவே யெடுத்தபவ
மிகவே கணிக்கமுடியா
விதியார் கரத்துறவு நமனர் கரத்துறவும்
விடுவா யெனக்கருதிலே
னுனையோதி யுற்றவர்கள் பவமே யெடுத்துழல
லுறுமோ வுனக்குமுறையோ
வொருநேர்மை பற்றியில னெனுமே யெனைக்கருணை
யுறவே யணைத்தருளுவாய்
நினையோதி நிற்பதல தினிவேறு திக்குமிலை
நினைவா யறக்குரிசிலே
நெறியே புகுத்தியெனை நலனாக வைத்திடுத
னிமலா வுனக்குரியதே
தனையே நினைத்துவெகு துயராகு தெற்குனருள்
தராநீள விட்டிடுவையோ
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கரருள்
தணிகாசலக் கடவுளே. (அ)

முருகா வெனக்கடிமை தவறு துரைத்திடுதன்
முதலான நற்றவமதாய்
முனியே யுரைத்துவரு மெனையா தரித்தருளி
முருகார் பதத்தருளுவாய்
வருகால னுக்கெனது மனமே பயப்படுது
மதலா யதற்குனருளே
மருவா யினித்தொடர்பு கருதே னதைத்தெரிதி
மழுவாள ருக்குமகனே
பொருவா ளினுக்குநிகர் விழியார் பரத்தையர்கள்
புகலே யெனக்கருதியே
புகுமாசை யற்றுனது பதமே யுரைக்கவருள்
புகழேறு நற்குரிசிலே
தருகாதி னிக்கருது மவையாக நற்கருணை
தருவாய் குறத்திகணவா
தணியார் கடுக்கைமதி யணியாதி சொக்கரருள்
தணிகாசலக் கடவுளே. (கூ)

மிகுசோதி யுற்றவுன தொழிலா ரடிக்கமல
மிசையே தரிப்பனதலால்
விரிவா மனத்தைமறு வழியே சரிக்கவினி
விடுவேனெனக் கொளுவதோ
நகுமாலை யுற்றொளிரு புயமேசெழித்துயரு
நலசோதி மொய்த்தவடிவே
நமனு ரெனைக்குறுகி யணுகா வணத்தருளி
நனிமேவியுற்ற மருவாய்
வெகுகோடி மெய்த்தவர்கள் தினமேவி யுற்றுவளர்
விரைசேர் பதத்தழகனே
விறலான வெற்றிமயின் மிசையே நடித்தெனது
வினையோட வுற்றுவருவாய்
தகுமே யெனப்புலவர் புகழேறு பொற்கழல்கள்
தமையே தரித்தணிகுவோய்
தணியார் கடுக்கைமதி யணிபாதி சொக்கரருள்
தணிகாசலக் கடவுளே. (க0)

வெளியேறி யுற்றுலவு தணிகா சலக்கிரியின்
மிகுகோயி லுற்றுவாழ்க
விரைமே வினித்தகழ லுடையா னெனக்குரிய
விறல்வேல லூற்றுவாழ்க
ஒளியாரு கட்கருணை யுறுமா முகத்திினொளி
யுயர்வாகி யுற்றுவாழ்க
வுமையா ளளித்தவயி லதுசேரு கைத்தலமு
மொருசேர வுற்றுவாழ்க
அளிமேயறு நற்றொடைய லதுசேர் புயத்தொகுதி
யழகாக வுற்றுவாழ்க
அணியார் சிகிப்பரவு கொடிதானு முற்றிலகி
யருகாக வுற்றுவாழ்க
களிமேவு கட்டுடைய மனமா ரெழிற்குலவு
கவினார் புயத்துவாழ்க
கதிரார் மதிக்கரிய முகிலோடு மித்தரணி
கவினேறி வாழ்கமாதோ. (கக)

(ஆக பதிகம் கசு, பாட்டு கஎசு.)

---

## கலித்துறை.

இன்பாரு மேதினி விண்ணு டளிக்கு மெமதிறைவா
பொன்பாவு மேனிப் புகழேறு நீற்றுப் பொலிவுடையாய்
அன்பாரு சோடச மானபதிக மணிதொடுத்துன்
றன்பாத மீதி லணிந்தேன் புனைந்தருள் சண்முகனே.

## குரு துதி.

பொன்னாற்ப்ரயோசனம் பொன்படைத்தோர்க் குண்டுபூதலத்தி
லுன்னாற் ப்ரயோசனம் நாயேற்குக் கோடியுலகறியு
மென்னாற் ப்ரயோசனம் மேதோகவிசெயு மேற்றமதுன்
றன்னாற் ப்ரயோசனம் பெற்றேன் கணபதிச்சற்குருவே.

---

முற்றும். சுபம்.

சோடசபதிகப் பிரபந்தம் முற்றுப்பெற்றன.

ஸ்ரீ முருகக்கடவுள் துணை.